"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End,"

ஸத்யம்வத.—Speak the Truth.

"Hitch your Wagon to a Star." "To Thine own Self be True."






அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1904-ம்ஸூ பிப்ரவரிமீ [இலக்கம் 10.

# *"A Faith of Reason which Postulates a God to Realise It."

"For man's well-being, Faith is properly the one thing needed"—Carlyle.

"And now abideth Faith, Hope, Love, these three; but the greatest of these is Love."—St. Paul. I. Cor. XIII.

"We can think of mind only in terms of matter. The antethesis of subject and object, never to be transcended while consciousness lasts, renders impossible all knowledge of that Ultimate Reality in which subject and object are united. It is one and the same Ultimate Reality which is manifest in us subjectively and objectively. The law of evolution holds of the inner world as it does of the outer world."—Herbert Spencer in *Principles of Psychology.*

## புத்திக்கெட்டாதது பக்திக்கெட்டும்.

### நாரதர்கலகம்.

(உண்மை விளங்க ஒரு திவ்ய புருஷர் சொல்லிய கதை.)

இன்றைக்குச் சுமார் நூறுவருஷங்களுக்குமுன் சென்னைக்கடுத்த "திருபுரைநகர்" என்னும் புராதன புண்யக்ஷேத்திரத்திலே "செல்வகேசவநாயர்" என்று ஒரு க்ஷத்திரியகுல திலகர்

* cf. "We would not be precluded from accepting religion in Fichte's sense—as the realisation of universal reason—if we can understand universal reason involving the conception that the highest good is the furtherance of the evolutionary process the race is undergoing. But once we have clearly grasped the nature of the characteristic problem human evolution presents we see how absolutely individual rationalism is precluded from attaining this: it can only be reached as Kant contemplated—"*by a faith of reason which postulates a God to realise it.*"—Social Evolution.

வாசஞ்செய்துவந்தார். இவருடைய முன்னோர்களில் ஒருவர் காஞ்சிபுரத்திலே சோழமஹாராஜாக்கள் ஆண்டகாலத்தில் அவருக்குள் அரண்மனைச் சேவகத்திலிருந்துவந்தார். அவர் ஆதியில் பிராம்மணர். சோழமஹாராஜனுக்குப் புரோகிதராம் பதவிபெற்றவராதலால், அவர் அந்த மஹாராஜாவின் அன்புக்கும் ஆதரவுக்கு முரியவராய் அவருடைய முழுநம்பிக்கைக்கும் பாத்திரராய் அவர் அருகிலே எப்போதும் வசித்துவந்தார். இப்படிவசித்துவரும் நாளில் அவருடைய இராஜ்ஜியத்தில் உட்கலகம் ஒன்று நேரிட திடீரென்று அரசனுக்கு அபாயம் நேரிடும்படியான ஆபத்து வந்து விட்டது. மந்திரி பிரதானிகள் இதுவிஷயத்தில் வேண்டியவிழிப்பின்றி உஷார்க்குறைவாயிருந்ததினால் திடீரென்று நேரிட்ட ஆபத்துக்காலத்தில் அரசனைக் காப்பாற்ற வகை தேடாதவர்களாயிருந்து விட்டார்கள். கூடவிருந்த புரோஹிதர் பிராம்மணகுலத்தவரானாலும் சகவாசவிசேஷத்தால் பிரம்மநிஷ்டையிலும் இராஜதந்திரத்திலே மனம் பாய்ந்தவராயிருந்தார். இப்படி திடீரென்று நேர்ந்த அபாயம் அரசனை மீளா ஆபத்துக்குள்ளாக்குமுன், இவர் உளவு மர்மங்களெல்லாம் அறிந்தவராதலால், பிரதானிவேஷம் பூண்டு அரசன் பேரால் அவன் படைகளை இரகசியமாய்த் தயார்செய்து வைத்திருந்து, கலகக்காரர்கள் உத்தேசத்தையறிந்து அவர்கள் வேஷம்போட்டு நகரில் பிரவேசிக்கு முன்னமேயே, ஆயுதபாணிகளான போர்ச்சேவர்களை க்ஷேத்திர யாத்திரைசெய்யும் பிரயாணிகள் கூட்டம்போல் சிறு கூட்டங்களாகப்பிரித்து, அங்கங்கேயிருத்தி, நல்ல சமயத்தில், முன்யோஜனையோடு அவர்களுக்கு சூசிப்பித்திருந்தபடி சோமக்கலந்தட்டி சங்குநாதம்செய்ய, ஸாதுக்களாய்ப் போலிவேஷம் தரித்திருந்த அத்தனைபேரும் போர்ப்புலிகளாகமாறி கலகக்காரர்கள் கண்விழித்துக் கத்தி வாங்குமுன் அவர்களை கால்பிடி கைப்பிடியாகக்கட்டி விலங்கிட்டு அரசன் கொட்டடியில் கொண்டுபோய் அடைத்துவிடச்செய்து தன்னுடைய யதாஸ்தானத்தில் அரசன் பக்கலடைந்து அவன் கண்விழிக்கும் தருணம் பார்த்திருந்தார். இரவில் நடந்த ஆரவாரப் போர்ச் சின்னங்களால், நகர்க் காவலாளர்கள் ஏதோ கலகமென்று தெரிவிக்க மந்திரி பிரதானிகளெல்லாம் தாங்கள் மோசம் போனதைப் பற்றி விசனித்து சேனைகளையெல்லாம் போருக்கு முஸ்தீபுசெய்து அரசன் துயில்நீங்கிவருவதை ஆவலோடு எதிர்பார்த்திருந்து, இராஜதானிக்கு நேர்ந்த ஆபத்தைத் தெரிவித்து அவர் உடனே யுத்தசந்நத்தராகவேண்டிய அவசரத்தை வற்புறுத்திநிற்க, அவனும் அப்படியே யாக அவசரமாய் காலைக்கடன்களை முடிக்க யத்தனித்தான். கூடவிருந்தபுரோகிதர் நித்யகர்மாநுஷ்டானங்களையதிகமாகவளர்த்தி வீண் காலதாமதம் செய்தனர். அரசன் அதுகண்டு பிராமணன்மேல் அடங்காக்கோபங்கொண்டு அவனைச்சிறையிலிட உத்தரவுசெய்து அவசர அவசரமாகப் போருக்குச்சந்நத்தனாக, பிராமணன், தன்னை யுடனே விடுவிக்காவிட்டால் சபித்துவிடுவதாகச் சொல்லிப் பயமுறுத்தினான். ஆபத்துக்காலத்தில் அச்சானியம்போல் பிராம்மணசாபம் பெற்றுப் போர்முகம் செல்ல மனமவற்றனாய், புரோஹிதருடைய உண்மையை யுணர்ந்த சோழன், அவரை வரவழைத்துப் பரிகாசமாய் "ஸ்வாமி! தபோமகிமை தங்களுக்கு நிரம்ப அதிகரித்துப் போய்விட்டது போலிருக்கிறதே! சாபமிட்டால் நான் தாங்குவேனா!" என்று சொல்லி அவரை விடுவித்தான். பின்னும் பிராம்மணர் இடையூறுசெய்ய, உள்ளதை யவரிடத்திலுள்ளபடி சொல்லி, அவருடைய ஆர்ப்பாட்டங்களெல்லாம் செய்ய அது சமயமன்றென்று வற்புறுத்த, புரோகிதர், பகவத் பக்தியிருந்தால் எப்பேர்ப்பட்ட ஆபத்தும் சூரியனைக்கண்ட பனிபோல் பறந்துபோய்

விடுமென்று பின்னும் தான் பிடித்தபிடியே பிடியாக நின்றார். அரசன் இவர் இப்படிச் செய்த அட்டிகளைத் தாளமாளாதவனாய், "புரோகிதரே, உமக்குத் தலை கழுத்தில் நிற்குக் காலம் இல்லை" யென்று சொல்ல, அவர் "எப்படியாவது மஹாராஜாவுக்குத் தலை கழுத்தில் தரித்திருந்தால் போதும்" என்று அவருடைய அவசரபுத்தியைச் சூக்ஷ்மமாய்க் கண்டித்தான். அதன்மேல் இவரிடத்தில் ஏதோ இரகசியமிருக்கிறதென்று அதை கிரகிப்பான் அவர் மனம் போனபடி விட்டுக் கொடுத்துப் பார்க்க, அரசனை மந்திராலோசனை சபைக்குப் போகவிடாமலே அந்தரங்க வழியாகக் கொட்டடிக்கு அழைத்துப்போய் கலகக்காரர்களெல்லாம் கால்கட்டு கைக்கட்டுகள் இன்னும் அவிழ்க்கப்படாமல் உள்ளே பந்தோபஸ்து செய்யப்பட்டிருப்பதைக் காட்டி அரசனுக்கு வந்த ஆபத்து அடியோடு நீங்கிவிட்டதால், ஆபத்து வந்தகாலத்தில் மோசம்போய்த் தூங்கின மந்திரி பிரதானிகள் ஆத்திரத்துக்கு அரசன் உடன்படவேண்டியதில்லையென்று புரோகிதர் போதித்தார். அரசன் பிறகு மந்திரி பிரதானிகள் மோசம்போனதை யெடுத்துக் காட்டி உள்ளதையுள்ளபடி கலகக்காரர் விசாரணையின்போது அவர்களுக்கு மெய்ப்பித்து, தன்னுயிரையும் அரசையும் காப்பாற்றிய புரோகிதர் பிறவியினால் பிராம்மணரானாலும் குணத்தினாலும் புஜபலபராக்கிரமத்தினாலும் க்ஷத்திரியராயிருப்பதால் அவருக்குத் தன் மகளையே பாணிக்ரகணம் செய்துகொடுத்து நாடுநகரங்களும் கொடுத்துத் தனக்குள் சிற்றரசாகவிருக்க அமர்த்திக்கொண்டான் என்று சொல்வர். இந்தக்கதையின் உண்மையையும் காலதேச வர்த்தமான விவரங்களையும் விசாரித்துக்கொண்டிருக்க அவகாசமில்லை. செல்வகேசவராயர் இப்பொழுது க்ஷத்ரியகுலதிலகராயினும் பிராம்மண ரக்தக்கலப்பு அவர் வமிசத்திலிருக்கிறதென்பதை ஸ்தாபிக்கவே அவருடைய பூர்வோத்திரத்தில் விசேஷமான இக்கதையை இங்கு சொல்லலாயிற்று.

இந்த செல்வகேசவராயர் காலவேற்றுமையினால் பூர்விக அதிகாரத்தையெல்லாம் ஆங்கிலேய கவர்ன்மெண்டுக்குப் பறிகொடுத்து அவர்களுடைய ஆட்சியில் அவருக்கு ஊதியமாய்க் கிடைக்கும் கைப்பொருளைக்கொண்டு கண்யஜீவனம் செய்துவந்தார். இவர் அக்காலத்தில் அதிசிரேஷ்டராயிருந்து கும்பினி ராஜாங்கத்தாரால் மிக மதிக்கப்பட்டவரா யிருந்தும், புத்தி யுத்தி சாமர்த்தியம் சம்பத்து உலகஞானம் எல்லாம் அமையப்பெற்ற அதிர்ஷ்டசாலியாகிய இவர் 'உள்ளக்குறை' யொன்றினால் அனலிலிட்ட மெழுகுபோல் மனமுருகிவாடினார். இப்படி யிவ்வுலகில் ஒருவன் விரும்பத்தக்க சம்பத்துக்களெல்லாவற்றையும் பெற்றும் சந்தோஷமின்றி உலகத்திலுள்ள மாந்தர்க்கில்லா உள்ளக்குறையொன்றினால் மனம் நொந்து வருவதை யுணர்ந்த அவருடைய தர்மபத்னி அவரை என்னதான் சிஷ்ருஷைசெய்து களிப்பிக்கப்பார்த்தும், மதன லீலைகளால் அவர் மனதை மாற்றமுயன்றும், தம் யத்தனங்கள் பலிக்காததுகண்டு அவ்வம்மணி மிக வருந்தலுற்றார். இராயர் அவர்கள் தம் நித்யகடன்களை வழுவின்றிச்செய்து ஒழிந்த வேளைகளிலெல்லாம் அவ்வூரிலுள்ள திரிபுரசுந்தரியம்மன் சந்நிதானத்தில் போயுட்கார்ந்து "அம்மணீ! நீயே எனக்குக்கதி! உன்னைவிட்டால் எனக்கு வேறுகதியில்லை! நீயே எனக்குத்தாய்: உன்செல்வக் குழந்தை நான். என் மனக்குறையை உன்னிடத்தில் சொல்லாது பாசபந்தங்களால் கண்பஞ்சடைந்த மாந்தரிடத்தில் சொல்லியென்ன பயன்! உள்ளங்கனிந்தாரை உள்ளபடிபோற்றும் பேரருள்வள்ளல் நீ! என் மனம் அனலிலிட்ட மெழுகுபோல் உன் ஸ்வரூபத்தைக்காணாது கனிந்துருகுவதை நீ யறியாயோ! நீ யெனக்குக் கொடுத்திருக்கும் எல்லாப்பாக்கியங்களும்

எனக்கு பாக்கியமாகத் தோற்றவில்லையே! அழுதபிள்ளைக்கு வாழைப்பழம் காட்டுகிறகதையாய் எனக்கு இவ்வுலகவின்பங்களைக் காட்டி ஏமாற்றப்பார்க்கிறாயே! உன் திருவருட்பால் கொடுத்துக் காப்பாற்றென்றால், கிலுகிலுப்பையைக்காட்டி யென்னைச் சமாதானப்படுத்தப் பார்க்கிறாயே! அம்மணீ! தாயே, இந்தப் பரிசோதனை வேண்டாம். என் உடல்பொருள் ஆவியையும் இதோ உனக்கு அற்பிதம் செய்தேன்! உன்னையன்றி எனக்கு வேறுகதியில்லை. உன் பக்தர்களன்றி யெனக்கு வேறு தோழரில்லை. உன்னடியார்களன்றியெனக்கு வேறு உற்றாரில்லை. உன்னையன்றி யெனக்கு வேறு பெந்துவுமில்லை. தாய், தகப்பன், தாரம், தனயர், செல்வம், செருக்கு, பேர், புகழ், கீர்த்தி யெல்லாம் நீரிற் குமுழிபோல் நீ காட்டும் விளையாட்டுகள். அம்மணீ! இவற்றோடெல்லாம் ஓடியாடி விளையாடியலுத்தேன்! இப்பிறவித்துன்பம் போதும்! 'இப்புன்பிறவி வேண்டேன் இனிவேண்டேனே'யென்று உன் காலையே கட்டிக்கொண்டழுகிறேன்."—என்று இப்படி உள்ளுறத்தியானித்து அந்த அம்மன் கோவிலிற்கு அடிக்கடிபோய் அம்பிகையே சரணம் என்று அழுதுவந்தார். காலையிலெழுந்தால் தன்னிஷ்டதேவதையைச் சிந்தித்து அவளுக்கு ஒரு மங்களஹாரத்தியேனும் செய்து ஆராதிக்காமல் வேறு வேலைபார்க்க இசையார். பொழுது புலர்ந்தபின் எத்தனை நேரம் வரையில் இகத்து ஜோலிகளிருப்பினும், நடுநிசியானாலும் அம்மன் தரிசனம்செய்து பள்ளியறை தீபாராதனை பார்க்காமல் தான் பள்ளிகொள்ள இசையார். இப்படி யனேக வருஷங்களாக ஓய்வொழிவின்றி அவ்வம்மனை ஹிருதய பூர்வகமாய் பக்தி செய்து ஆராதித்து ஆத்மஞானம் சித்திக்கவேண்டுமென்று ஒரே பிடியாக மனத்தையெல்லாம் அதில் செலுத்தித் தபசு செய்துவந்தார். இப்படிப் பத்துவருஷங்கள் கழிந்தன. அம்பிகை அவர் பக்தி பூசனைக்குகந்து அவருக்கு புத்திர மித்திர களத்திர பாக்கியங்களெல்லாமளித்து லெக்ஷ்மீகடாக்ஷமுண்டாக அனுக்ரகித்தாள். இதையெல்லாம்பெற்றும் அவர் ஆசையடங்கவில்லை. மனம் ஒடுங்கவில்லை. அவருக்கு சம்பத்துக்களெல்லாம் அதிகரிக்க அதிகரிக்க, அவைகளையெல்லாம் அம்பிகையின் வரப்பிரசாதமாகப்பெற்று அவளை யாராதித்துத் துதிப்பதிலேயே அதிகமாக உபயோகித்துவந்தார். பணம் அதிகமாகக் கிடைத்தால் அம்பிகைக்கு நித்யபூஜைசெய்ய ஏற்பாடுசெய்வார். புத்திர பாக்கியம் பெற்றபின், முதலிற் பிறந்த குழந்தை பெண்ணாயிருந்தால், 'இது பெண்ணாய்ப்பிறந்ததே!' என்று மனம் சலிக்காமல், 'இது அம்பிகையின் வரப்பிரசாதம்: அம்பாளைத் துதிசெய்ய இக்குழந்தையை அருமை பெருமையாய் வளர்ப்பேன்' என்று அதற்கு பாட்டும் படிப்பும் கீர்த்தனைகளும் தோத்திரங்களும் பணத்தைப் பணமென்று பாராமல் செலவழித்துச் சொல்லிக்கொடுப்பார். பிள்ளைகுட்டிகள் பெருத்த சம்சாரியானால், நான்மட்டும் இனி ஒண்டியாகக் கோயிலுக்குப் போகாமல், பெண்டுபிள்ளைகளோடு ஸஹகுடும்பியாய் என் தாயைத்தெரிசித்து வருவேன் என்று பெண்டாட்டி பெண் முதலானவர்களை 'கோஷா'முறை ஜாதிமுறையும் பார்க்காமல் கோயிலுக்கு பஹிரங்கமாக அழைத்துப் போவார். கோயிலுக்குப்போனால் "நான் அழுக்குப்படிந்த மனதுடையவன்: அம்பாளுக்கு என் குறையை வாய்திறந்து சொல்ல நான் யோக்கியனில்லை: மாசுமறுவற்ற பாலன் வாயால் என்குறையைச்சொல்லி பகவானைத்துதித்தால் அதைக்கேளாமல் தள்ளமுடியாது" என்று பசுங்கிளிபோலும் தன் இளங்குழந்தையை வாய்விட்டுத் தன்குறையிறந்து இனியகுரலில் பாடச்செய்து உண்மையறியாத அக்குழந்தை இராகம்போட்டு உள்ளபடி பாட தான் மனங்குழைந்து

கைகூப்பி மனதில் கடவுளைத் தியானித்து நிற்பார். இப்படி அலுக்காது சலிக்காது பகவத்பக்தி செய்து வருநாளில் ஒருநாள் அவருக்கு இருந்திருந்தாற்போல் திடீரென்று ஒரு ஆபத்து விளைந்தது. எல்லாப் பற்றியிலும் உயிர்ப்பற்றிகொடுத்தல் மகாகஷ்டமானது. அதுவும் அன்பும் அபிமானமும் பாராட்டப் பழகியபின் ஒரு பிராணியை விட்டுப் பிரிக்கப்படுதல் மகாகஷ்டம். கொழுக்கொம்பில்லாமல் விடப்பட்ட கொடி எப்படித் தவிக்குமோ அதிலும் பதின்மடங்கு அதிகமாய்த் தவிக்கும் கொழுக்கொம்பில் சுற்றிப்படர்ந்த கொடி அக்கொம்பை விட்டும் இடையில் பிரிக்கப்பட்டால்; கொழுக்கொம்பு வழியாக ஏறி மேலேயுள்ள பந்தர்ப் பரப்பில் பற்றி முதிர்ந்த கொடியோ கொழுக்கொம்பு இருந்தாலும் போனாலும் பந்தரின்மேற்படர்ந்த பற்றுக்கோட்டின் பலத்தால் பாதிக்கப்படாமல் தன்னிலை குலையாது நிற்கும். அப்படியே உலகத்தில் பெற்றார், பிறந்தார், உற்றார் என்றுள்ள பெந்துவர்க்கங்களெல்லாம் கிஞ்சிக்ஞ ஜீவனை மனிதனது அன்பு என்னும் இளங்கொடி பற்றிப்படர்ந்து மேலெழுந்து சென்று ஆகாயத்தில் அளாவிநிற்கும் நிராலம்பமான ஜகதீசன் பாதாரவிந்தமாகிய (அடிநடு முடிவற்று சச்சிதானந்த ஸ்வரூபமாய் விளங்கும் பரமசாதகமான) பந்தரில் போய்ப்பற்ற சாதகமாயுதவும் கொழுக்கொம்புகளாம். ஆகையால் அன்புவைத்த ஒருவரை யிழத்தல் பரமன் பாதத்தில் நீங்காத பற்றுமுற்றப் பெறாதவர்க்கு பிராணனை வதைத்துச் சின்னபின்னம் செய்யும் பெருங்காற்று மழைக்கு ஒப்பாம். இப்படிப்பட்ட மஹாசங்கடமாகிய சோகம் நேரவும், பாவம், அந்த ஏழை பக்தர் மனம் விண்டு வெதும்பிக் கருகியது. "பட்டகாலிலேபடும் கெட்டகுடியேகெடும்" என்பது பழமொழி. அதற்கொப்ப அவருக்கு இதை யொட்டி இன்னம் பல துன்பங்களும் நேரிட்டன. சாவு, இழவு, துன்பம், துக்கம், வியாதி, வழக்கு, விசாரம் எல்லாம் ஒன்றின் மேல் ஒன்றாக சேர்ந்தன. துன்பத்திலடிபடாத தூயஹிருதயம் வாய்ந்த அன்பர் மனம் நொந்துருகியது. கடைசியில் குழந்தைகளையும் பத்னியையும் விட்டுப் பிரிந்திருக்கும்படியான சந்தர்ப்பமும் நேரிட மனம் விண்டுபோகலாயிற்று. தன் யுக்தி புத்தியால் செய்வதொன்றும் பலிக்காததுகண்டு தெய்வம் விட்டவழி விடட்டும், எதுவந்தாலும் அனுபவிக்க வேண்டியது என் தலைவிதியென்று மனம்வெறுத்து வைராக்கிய சித்தராய்நின்றார். அப்பொழுது அகஸ்மாத்தாய் அவரிடம் ஒரு தெய்வபக்தர்வந்து, 'எங்கேபோனாலும் எதுவந்தாலும் சரி'யென்று சொல்லக் கேட்டேன்: அப்படியானால் இவ்விடத்திற்கு மூன்று மயில் தூரத்தில் சாமளாதேவி கோயிலொன்றிருக்கிறது. அங்கே நித்யானந்த தேசிகர் என்று ஒரு பரதேசியிருக்கிறாரெனக்கேள்வி. அவரைப் போய்ப்பார்க்கலாம் வாருங்கள். அவருடைய வர்க்கு துன்புற்ற தூயஹிருதயர் மனதுக்கு உடனே ஆறுதலைக்கொடுக்கும் சக்தி வாய்ந்ததாயிருக்கிறதாம். அவரை அவசியம் போய்ப் பார்க்கவேண்டு"மென்று அவரைக் கையைப்பிடித்தழைத்துக் கொண்டுபோனார். செல்வகேசவராயர் சத்தியத்திற் கட்டுப்பட்ட ஸர்ப்பம்போல் அவர் வசப்பட்டவராய் அவரோடு சென்று சந்தியாதேவி ஆனந்த நர்த்தனம் செய்யும் அதியற்புதமான மாலைவேளையில் நித்யானந்ததேசிகர் இருந்த ஆசிரமம் வந்துசேர்ந்தார். அவர் இவர்களைப் பார்த்ததும் கல கலவென்று சிரித்து "வாடியம்மா, வா, வா, வா" என்று எல்லாருக்கும் முகமன் கூறி யழைத்து "என்னசேதி? ஏன் முகம் வாடியிறங்கியிருக்கிறது? மனசில் என்ன விசாரம் அப்பா? வீணாக ஏன் வருத்தப்படவேண்டும். ஒன்றுமில்லை; பார்க்கப்போனால் நாம் படும் துக்கத்துக்கு ஒருகாரணமு

மில்லை. இல்லாததை இழுத்து வைத்துக்கொண்டு துக்கங்கொண்டாடி யழுகிறது நமது அறியாமையேயன்றி, வேறுயாரிடத்திலும் குற்றம் சொல்வதற்கில்லை. சங்கடப்படாதேயம்மா. தைரியமாயிரு. ஆனந்தமாயிருக்கலாம். அசைவற்றிருக்கலாம். ஒருகுறைவுமில்லை; ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். எது சத்தியமோ, எது உண்மையோ, எது அசைவற்றதோ, அதுவே நாமாயிருக்க நமக்கென்னகுறை? ஆனந்தமாயிருக்கலாம்! அசைவற்று அகண்டாகாரமாய், எங்கும் நிறைந்ததாய், தானே தானாய்த், தன்மயமாய், சோதியாய்ச், சுடராய், சொல்லிறந்த மதியாய், சுககனமாய், ஆதியந்தமற்றதாய், ஏற்றத்தாழ்ச்சியற்றதாய், ஏழைக்கெளியதாய், எல்லாத் துன்பங்களுக்குமோர் நல் மருந்தாய், மும்மலமற்றதாய், முமுக்ஷுக்களுக்கு லக்ஷியமாய், என்றென்றைக்கு மழியாததாயுள்ள நித்தியமுத்த சுத்தப்பொருள் எதுவோ அதுவேயாகவிருந்து ஆனந்திக்கலாம். ஒன்றுக்கும் பயப்படாதேயம்மா! ஒன்றுக்கும் சலிக்காதே! துக்கமேயில்லை! துன்பமேயில்லை! இவைகளெல்லாம் நாமாக உண்டுபண்ணிக்கொண்டவை; நாம் மனதுவைத்துத்தள்ளினால் நீங்கத்தக்கவை. ஆகையால் எதற்கும் பயப்படாதே. சூஞ்சலப்படாதே. வீணாக மனதைப் புண்படுத்திக் கொள்ளாதே. சந்தோஷமாயிரு! உனக்கொன்றுமில்லை: எல்லாம் ஈசுவரிசெயல் என்றிரு. உன் கவலைகளையெல்லாம் என்னிடத்தில் கொடுத்துவிடு. உன் துக்கங்களையெல்லாம் என்னிடம் ஒப்புவித்துவிடு. உனக்கு சமுசாரமேயில்லை. நித்யஸ்வரூபி. ஆனந்தஸ்வரூபிநீ" யென்று இப்படி சரமாரியாய் ஆற்றுதலும் தேற்றுதலும் ஆனந்தங்கூறுதலும் அபயமளிப்பதுமாகப் பேசினார். இராயர் தன்னை யறியாதவராய் அவருடைய வார்த்தைகளி லீடுபட்டு, தானறியாமலே தன் ஹிருதயத்தை அவருக்கு 'ஒப்புக்கொடுத்துவிட்டார். அவர் பேசும்பொழுதெல்லாம் அவர் வார்த்தையிலீடுபட்டு தன்னுள் நடப்பது தானறியாமல் ஸ்தம்பித்து நின்றவர், அவர் பேசி ஓயவும் தன்னை முற்றும் மறந்து சிறிதுநேரம் வாய் பேசாதிருந்து, தன்னறிவு வரவும் தன் மனதிலிருந்த பளுவெல்லாம் நீங்கி தேகம் பஞ்சுபோலிருக்கக்கண்டார். சாக்ஷாத் திரிபுரசுந்தரியே நேரில் வந்து பேசினால் அவருக்கு எவ்வளவு ஆறுதலிருக்குமோ அவ்வளவு ஆறுதலும் தேறுதலுமுண்டாயிற்று. "ஸ்வாமி! எல்லாம் தங்களிடம் ஒப்புவித்துவிட்டேன். நான் ஒன்றும் அறியாக் குழந்தை! என்னை யீடேற்றுவது தங்கள் கடன். என்னை ஒப்புக்கொள்ளுங்கள்" என்று சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்து விடைபெற்று, தன்னுள் உண்டான மாறுதலைப்பற்றி அதிசயப்பட்டுக் கொண்டே வீடுபோய்ச் சேர்ந்தார். இரவு அம்பிகையை நினைத்துக்கொண்டு நித்ரைபோக, அம்மன் திவ்யமங்கள ரூபத்தோடு வந்து "குழந்தாய் என் வருந்துகிறாய்! நானிருக்கிறேன். நீ யொன்றுக்கும் பயப்படத்தேவையில்லை" யென்று சொல்லி மறைந்துவிட்டாள். மறையவும், அவர் பிரிவை யாற்றமாட்டாதவராய் திடுக்கிட்டு விழித்துக்கொண்டு தான் கனவில் கண்ட தன் இஷ்டதேவதை மறைந்ததற்காகத் தானழுதுகொண்டிருக்கக் கண்டார். "இதென்ன அழுகை! இவ்வளவு அன்பு ஆதரவு காட்டியும், ஒன்றுக்கும் பயப்படாதே யென்று கனவிலும் நனவிலும் அபயஸ்தம் கொடுத்துத் தேற்றியும் அழுகிறோமே! நாம் அம்பிகையிடத்தில் பூர்ண அன்பு வைத்திருந்தால் நம்மை அவள் கைவிடாள். இந்த நித்யானந்த தேசிகர் நமக்கு ஈசுவரியை நேரில் காட்ட வந்தவர் போலுமே தோற்றுகிறார். அவரைக் கைவிடக்கூடாது. ஐயோ! நாம் அம்பிகையை அன்னையாகப் பாவித்துத் தியானித்து பக்தி

செய்து வந்தோமே; அந்த அம்பிகை தாயாகவே வந்தல்லவோ என்னையாளவேண்டும்! 'எண்ணினர்க்கெண்ணின்படியிருந்தருள்புரியு' மீசுவரி எனக்குமட்டும் என் எண்ணத்துக்கு மாறாக வந்தென்னையாள நினைத்தனளோ! எப்படியிருந்தாலும் நித்யானந்தர் ஒரு பெரிய மஹாத்மாவே. அவர் சந்நிதானத்திலிருந்து அவர் வாய்ப்பிறப்பைக் கேட்டமாத்திரத்திலே அடக்க முடியாத துக்கங்களெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி மனதிலுள்ள பளுவெல்லாம் நீங்கினதன்றி தேகமும் பஞ்சுபோல் இலேசாயிற்றே. அது அவருடைய மகத்துவமல்லவா! அவரை நாளைக்குப் போய்ப் பார்ப்பேன்!" என்று தீர்மானித்தார். அப்படியே மறுநாள் மாலையில் அவரைப்போய்ப் பணிந்தெழுந்து உற்று நோக்கும்பொழுது நேற்று பேரைக்கொண்டும் அந்திப்பொழுதில் அவர் வார்த்தையி லீடுபட்டிருந்ததினாலும் ஆண்ரூபமென்று நினைத்திருந்தவர் காஷாயம் தரித்த பெண்ணுருவாக மாறியிருக்கக் கண்டார். இதுவும் ஒரு லீலையே. நேற்று நாமிவரை உற்று நோக்காதுதானே ஆண்ரூபமாக பாவித்துச் சென்றோமே. இராத்திரி நாம் சொப்பனம் கண்டதும், விழித்து நினைத்ததும், இப்பொழுது கண்டதும் எல்லாம் நன்றாகப் பொருந்திவிட்டதே! இனி இந்த உருவம் ஈசுவரியின் கடாக்ஷத்தால் நம்மையாள வந்த அவதாரஸ்வரூபமேயன்றி வேறல்லவென்று தன்னுள் தீர்மானித்து பின்னும் பார்க்கலாமென்று வாளாவிருந்தனர். அந்த சமயத்தில், "என் குழந்தை, என்னப்பன், என்கண், வந்தையா அம்மா, இராத்திரி சுகமாய் நித்திரை செய்தாயா; ஈசுவரி கிருபைகிடைத்ததா? ஈசுவரியிடத்தில் மாறாத பக்தி யுண்டாயிற்றா?" வென்று சரமாரியாகக் கேள்விகளும், உத்தரம் சொல்லுமுன் சந்தோஷமும், செல்வப்பேரிட்டுக் கொண்டாடுதலுமாக, கன்றைக்கண்ட சேதாப்போல் நித்யானந்தர் ஆனந்தம்பொங்கி "குழந்தை, குழந்தை"யென்று அவரைச் செல்வமாய்க் கொண்டாட மகாராஜராஜஸ்ரீ செல்வகேசவராயரவர்கள் தனக்குண்டான 36-வயதையும் பேர் கீர்த்தி அந்தஸ்து கௌரவம் தனம் கனம் எல்லாவற்றையும் மறந்து ஒன்றும் பேசமாட்டாமல் கரகரவென்று கண்ணில் நீர்மல்க, உள்ளம்பொங்க, உடல் நெக்குவிட்டுருக, தன்னெண்ணமே தனக்குத் தெரியாதபடி அன்பு நிறைந்து ஆனந்தபாஷ்பம் வடித்தார். உடனே "அழுகாதேயடி யம்மா, உனக்கென்னகுறை! ஒரு பயமுமில்லை! ஆனந்தமாயிருக்கலாம்!" என்று சொல்லிக்கொண்டே அவருடைய கண்களிலிருந்தும் தாரை தாரையாய் ஓடின நீர்ப்பெருக்கை அடைப்பார்போலும் நித்யானந்த தேசிகர் அவருடைய விரல் நுனிகளால் அவர் கண்களைத் துடைக்கிற பாவனையாகத்தொட, தானாய் வடிந்த நீர் "லாக்குமதகில்" கதவடைத்த வெள்ளம்போல் தடைப்பட்டு நின்றுவிட்டது. தன்னையன்றி கண்ணில் வந்த தண்ணீர், தன் முயற்சியின்றியே நின்றுபோக, நின்ற நீரை வரவழைக்கப்பார்த்தும் வராமையால் இதுவுமுன்மாயமென்று அவர் பாதத்தில் விழுந்து அவருடைய பாதபத்மம் தன் நெற்றியில்பட நமஸ்கரித்து அவருடைய திருவடியைக் கண்ணி லொத்திக்கொண் டெழுந்துட்கார்ந்தார். நித்யானந்தர் நமஸ்கரித்தெழுந்தவரைப்பார்த்துப் புன்னகைவிளங்க கமலம்போன்ற தமது திருக்கையால் அவரது முகத்தைத் தடவிக்கொடுத்து மௌனமாயிருந்தார். சற்றுநேரம் கழித்து இராயர் நிகழ்ந்ததையெல்லாம் வியந்து சொல்ல, எல்லாமறிந்தவர்போல் நித்யானந்தர் புன்சிரிப்புத்தவழ முகமலர்ச்சியோடு கேட்டுக்கொண்டிருந்தார். கடைசியில் "பக்தியைமட்டும் கைவிடாதேயப்பா, மற்றதெல்லாம் உனக்குத் தானாகவரும். பக்தியினாலாவது புத்தியினாலாகாது" என்று செப்பி "என் செல்

வக்குழந்தை நீ” “உன்னைப் பெற்ற பாக்கியமே பெரும்பாக்கியம்” என்றார். செல்வகேசவராயர் அன்பு நிறைந்து பதில் சொல்லமாட்டாமல் மறுபடியும் கண்ணீர் வடித்தார். இம்முறை நித்யானந்தர் கண்களிலிருந்தும் கண்ணீர் வடிந்தன. இதுமுதல் இருவரும் தாய் பிள்ளைகளாகி விட்டார்கள். தாயைவிட்டுப் பிள்ளை ஒருதினமும் பிரியப்பொறுக்கார். நித்யானந்தரும் ஆசாபாசங்களெல்லாமற்ற துறவியானாலும் அவர் “செல்வக்குழந்தை”யை விட்டுப் பிரிய மனம் சகியார். இப்படித் தாய் பிள்ளை பாவமாகவேயிருந்து வேடிக்கை விளையாட்டிலே அவருக்கு ஆத்மவித்தையவ்வளவும் உள்ளத்திற் பட்டுறைக்கப் போதித்து ஸ்வானுபவோதயம் எப்போ எப்போ என்று இருவரும் காத்துக்கொண்டிருந்தார்கள்.

“செல்வக்குழந்தை”யாம் இராயருக்கு வேதாந்த விசாரம்செய்து ஐயந்திரிபற அறிய வேண்டியதெல்லாம் நன்றாகப் பலித்துவிட்டது. அறிந்ததை அப்பியசித்து அனுபவத்துக்குக் கொண்டுவரவேண்டியதொன்றேபாக்கி. கர்மம் தொலைய மலம் நீங்கி ஆத்மானுபவ பரிபாககாலம் எப்போ எப்போவென்று இருவரும் காத்துக்கொண்டிருந்தார்கள். நித்யானந்தருக்கு எப்படியாவது தன் செல்வக்குழந்தையை ஸ்வானுபவ நிலையில் நிறுத்திவிடவேண்டுமென்று எண்ணம். செல்வகேசவராயர் தாய்க்கு “செல்வக்குழந்தை”யாய் விட்டபடியால், அவருக்கு விளையாட்டுப்புத்தி யதிகம். ‘பக்தியொன்றிருந்தாலும் முத்தியனுபவிக்க முயற்சியும் வேண்டும்: முயற்சித்துப்பெற்ற முத்தியைப் பின் விரும்பாது விடவும் வேண்டு’ மென்கிற மர்மத்தை யுணர்ந்து முணராதவராய், தாய்பிள்ளை யென்கிற விளையாட்டில் கீழுள்ள மாடிகளில் தானே துவைதபாவனையிலிருந்து விளையாடிக்கொண்டிருந்துவிட்டார். “விஞ்ஞானமென்பது வியவகாரவிருத்தி” யென்றிருப்பதால், தனக்குள்ள விஞ்ஞான சக்தியினால் நித்யானந்தரிடம் வேதாந்த விசாரம்செய்து நற்கதியடையவரும் நானாவித சிஷ்யர்களையும் தந்திரமாய் அவரவர் மனோபாவங்களும் தத்துவங்களும் விளங்கக் கிண்டிவிட்டு வேடிக்கைபார்ப்பதும், சற்சிஷ்யர்களுக்கு ஸர்வசாதகங்களும்செய்து ஸத்ஸங்க விர்த்திக்கனுகுணமாயிருப்பதுமாக. இப்படி ஸத்காலக்ஷேபம் செய்துவந்தார். இப்படி யிவர் விளையாடிவருவதைப்பார்த்த நித்யானந்தர் தனக்கு பரிபூர்ணகாலம் கிட்டியதையுணர்ந்து தம் “செல்வக்குழந்தையை” தம்முடைய தபோமகிமையினாலேயே கடைசிப்படியும் தாண்டத் தூக்கிவிட்டு ஸ்வானுபவநிலையில் நிறுத்த வேண்டுமென்று பிரயத்தனம் செய்யநினைத்தார். இதையறிந்து, பக்தர்கள் ஹிருதயத்தைப் பரிசோதித்து அவர்கள் மனசில் படிந்துகிடக்கும் பூர்வவாசனைகளைக் கிளப்பிவிட்டு வேடிக்கை பார்ப்பதே தொழிலாயுள்ள நாரதர் அவருக் கியல்பாயுள்ள விஞ்ஞான சக்தியை விர்த்தி செய்து அவர் பக்திக்கு அதனால் ஒருவிதபங்கமுண்டாக நடுவிலிருந்து வேடிக்கைபார்த்தார். நித்யானந்தர் தம் “செல்வக்குழந்தைக்குத்” தம்மிடத்திலிருந்த பக்திவிசேஷத்தின் வலிமையைக்கொண்டு தம்முடைய தபோமகிமையினால் யுக்தியாய் அவரை விஞ்ஞானமயம் தாண்டச் செய்து ஆனந்தமயத்துக் கப்பாலும் கொண்டுபோய் முதலாவது மாடியில் “முத்தியென்னப்படு மங்கையைச்சேர” அவருக்குத் தம்முடைய “சத்தியென்னப்படும் ஈசனருள்” கூட்டிவைக்கப் பார்த்தார். ஆனால் விஞ்ஞானசக்தி யதிகப்படவும், இதுவரையில் தாயென்று கொண்டாடிய நித்யானந்தரை, அவருடைய “செல்வக்குழந்தை” பிள்ளைப்பழக்க விசேஷத்தால் “பேதைமையென்பதே பெண்ணுருவாதலால், நீபெண்பால்: உனக்கு இது தெரியாது அது தெரியாது”

என்று திடுத்து வாசாஞானம் பேசத்துவக்கியர். இதையறிந்த நித்யானந்தர் "ஓஹோ இவனை செல்வங் கொடுத்துச் சீரழிய விட்டுவிட்டோம். இவனை அன்பாலாண்டாலன்றி வேறு வகையில்லையென்றுணர்ந்து "பெண்பால்" என்று தன்னிடத்து பால்வேற்றுமை பாராட்டுவதை யூகித்து "சரி, அப்படியேயிருந்து 'பெற்றமனம் பித்து' என்பதை ரூபித்து இவனைவழிப்படுத்துவோ"மென்று உள்ளத்தில் நினைத்து ஏதோ ஒரு சந்தர்ப்பத்தைச் சாக்கிட்டு, "நீயென்னை விட்டுப்பிரிந்து போய்விடப்போகிறாயென்று எனக்குப்படுகிறது" எனச்சொல்லி தாரைதாரையாய்க்கண்ணீர்விட்டழுதார். தாயழப் பிள்ளையழக், கூட இருந்தவர்கள் இவர்கள் படும் சங்கடத்தைக்கண்டழ, பெரிய கோலாகலமாயிற்று. "செல்வக்குழந்தை"யைப் பிடிக்கப்போட்ட தூண்டில்முள்ளில் அந்த மச்சம் சிக்கிக்கொள்ளவில்லை. பார்த்தார் உண்மையென்னவென்று, கர்மம் தடைசெய்வதைக் கண்டார் தம் ஞானதிருஷ்டியால்: இனி இவ்வுருவோடிருந் தாகவேண்டியதொன்றில்லையென்றெண்ணினர். ஆசைவிட்டார். எல்லாப் பாசங்களினும் வன்மைபெற்ற ஆத்மபாசபெந்தமாம் குருசிஷ்யபாவனையையுமறுத்தார். ஆசிவசனங்கூறி தான் அருமையாய்வளர்த்த ஆத்மபுத்திரர்களை 'திருபுரைநகர்' அம்மன் சந்நிதியிலிருந்து திரிபுரசுந்தரியின் வசமே திரும்பவும் ஒப்புவித்தார். ஒன்றுமறியாத சாமானியர்போலிருந்து எல்லாரையுமேமாற்றி ஒரு வாரத்தில், சுட்டபடம்போலிருந்த தேகத்திரியங்களையும் ஒரு நிமிஷத்தில் நீறாக்கி வெட்டவெளியில் மறைந்து அகண்டாகாரமாய் சுத்தமான பரவெளியில் அந்தர்த்தானமாயினர். ஆகவும் இவர்து குழந்தைகளெல்லாம் கண்கலங்கி மனம்புழுங்கி ஓஹோ மோசம் போனோமேயென்று மிகநொந்து வருந்தினர்கள். திரிபுரையை நம்பியிருந்தவர்கள் திரிபுராதேவி சந்நதியடைந்ததும் அவர்கள் மனக்கிலேசம் நீங்கப் பெற்றார்கள். ஜோதியுருவாய் மனனஞ்செய்து யோகநிஷ்டைபெற்று நிர்க்குணோபாசனைசெய்து பரிபக்குவ மடைந்தவர்களுக்குப் பரவெளி தெரிசனமுண்டாகி ஆத்மத்தியானம் நிலைத்தது. நித்யானந்தரையே மூர்த்தமாகவைத்து தியானித்து வந்தவர்கள் மூர்த்திதெரிசனம்பெற்று ஸ்பரிச சோதனைகாட்டி அபயஸ்தமளித்து ஆதரவு கூறப்பெற்றனர். இப்படி அவரவர் பக்திக்கும் தியானத்துக்கும் அப்பியாசத்துக்கும் தக்கபடி அவரை யண்டி ஆத்மவிசாரம் செய்தவர்களும் ஆத்மானுபவம் தேடினவர்களும் அவரவர் பரிபக்குவ விசேஷத்துக்குத் தக்கபடி அவரவர் மனோரதம் ஈடேறப்பெற்றனர். அனுபவத்திலும் அப்பியாசத்திலும் இவர்கள் என்ன வேறுபட்டிருப்பினும் 'நித்யானந்தர் இன்னுமிருக்கிறார்' என்பதுமட்டும் இவர்களெல்லாரும் ஒருமனதாய்ச்சொல்லிச்சாதிக்குமுண்மையாயிருக்கிறது.

இப்படி இவரிடம் அனுக்கிரகம் பெற்றவர்களில் சிலர் அப்பியாசிகளாயிருந்து வருகையில், இவர்களது விக்ஞானசக்தி முற்று மடங்காதது கண்டு நாரதர் பின்னும் கலகஞ்செய்ய ஆரம்பித்தார். நித்யானந்தர் தம் சிஷ்யர்களுடைய ஆத்மானுபவம் முற்றுமுன் அவர் தேகத்தை மறைத்துவிட்டபடியால் அவர் முன்போல் மறுபடியும் தேகத்திரியங்களோடு தோன்றி தங்களுக்கு பூர்ணானுபவம் சித்திக்கச் செய்யவேண்டுமென்று ஒரு ஆசையையுண்டுபண்ணி உண்மையாக விரும்பினால் விரும்பியது சித்திக்காதாவென்று அவர்கள் பக்தியின் பெருமையை மெச்ச மறுபடியும் அவர்கள் சத்குருவைத் தேடி யலையும்படிச்செய்தார். இப்படி தேடி யலைந்த பல[illegible] அவரவர் மனோரதத்துக் கிசைந்தபடி சிலர் ஈசுவரிதான் குருவென்றும், சிலர் அம்பி[illegible]ஞானியாம் வென்றும், சிலர் அந்த மஹான் வாக்குத்தான் எனக்கு குருவென்றும், சிலர் இந்[illegible]

தான் எனக்கு ஈசுவராம்சமாக மூர்த்திகரித்து வந்திருக்கிறுனென்றும், சிலர் எனக்கு பேசுந் தெய்வம் கிடைத்ததென்றும், இப்படிப் பலவாறாகக் கொண்டாடினர்கள். இப்படி யெல்லாரும் ஒன்றுகூடி ஒருமைப்பட்ட மனதோடு ஸத்ஸங்க சகவாசம்வைத்து ஆத்மானந்தம் தேடி வருகையில், விக்ஞானசக்தியின் விசேஷத்தினல் ஒருவர் ஆத்மாவைத்தள்ளி வாக்கைப்பார்த்து அதில் குற்றம் கண்டார்; ஒருவர் நடத்தையைப் பார்த்து மோசம்போனர்; வேறெருவர் உருவத்தைப் பார்த்து உபேக்ஷைகொண்டார்; மற்றொருவர் ஸத்ஸங்கஸஹவாஸ விசேஷம்பற்றி அநுதாபம்பாராட்டி ஆத்மநிஷ்டையை யிழந்தார். இப்படியாக ஒரு வருஷகாலத்தில் எல்லாரும் இப்படி அல்லோலகல்லோலப்பட்டு ஆத்மநிஷ்டையில் தடுமாட்டம்கண்டு திண்டாடினர்கள். சற்குரு அநுக்கிரகத்தினல் இவையெல்லாம் பரிசோதனையென்றுணர்ந்து அவரவர் தம்மில் கண்ட வாசனவிசேஷமான குற்றங்களை நீக்கிக்கொண்டு விக்ஞானமயத்தின் மாயையைக் கடந்து ஆனந்தமடைந்து அதையும் விட்டு ப்ரக்ஞானமென்னும் பரப்ரம்மஸ்வரூபத்தில் லயித்து முக்தி பெற்றுய்ந்தார்கள். ஆகையால் விக்ஞானசத்திக்கு அதிஷ்டான அதிகாரியாகிய நாரதர் அக்ஞான வாசனையுள்ளமட்டும் உள்ளத்தைக் கிண்டிவிட்டுக்கலகம்செய்து வேடிக்கைபார்த்துக் கொண்டேயிருப்பார். ஆகையால் விக்ஞானசக்தியால் பாரமார்த்திகமான ப்ரம்மஸ்வரூபத்தைக் கண்டனுபவிக்கமுடியாது. ஆத்மப்பிரகாசத்தினல் விக்ஞான சக்தி அதிகூர்மையடைந்து உலகத்திலுள்ள எல்லாவஸ்துக்களையும் தத்துவார்த்தமாக அறியும் சக்திவாய்ந்ததாகும். அதையும்விட்டு அதற்குமேலுள்ள ஆனந்தமயமும் கடந்து, அப்பாலுள்ள தத்ஸ்வரூபமான ஸ்வயம்பிரகாசவெளியில் ஒன்றுய்க்கலந்தனுபவிப்பதே பதமுத்திகளுக்குமேலான உண்மையான பரமுக்தியளிக்கும் சாக்ஷாத்கார சாயுஜ்யநிலையாம். அந்த நிலையிலிருந்து கிழிறங்காதப்பியாசித்து வந்தால் அது சகஜானுபவமாகி அப்புறம் எந்தநிலையிலிருந்தாடினுலும் அசைவற்றிருக்கும் அதியுந்நத நிலைகுலையாதிருக்கலாமென்றுபதேசித்து என்முன்னிருந்த திவ்வியபுருஷர் சட்டென்று பேச்சறுத்து மௌனமாயிருந்தார். அந்த மௌனநிலையை உணர்த்துவது சாத்தியமில்லையால் அதையவரவர் சற்குருவனுக்கிரகத்தினல் ஸ்வானுபவ நிலையிலே யறிந்து கொள்ள வேண்டும்.

"சாகாதிருந்ததலமேமவுனமது
ஏகாந்தமாகவிரு."

என்று ஔவையார் இந்த மௌனதெரிசனத்தினுண்மையை யுள்ளபடி சூசிப்பித்துச்சொல்கிறுர். இந்த மௌனமே முத்திசித்தியெல்லாம். இது சங்கற்பவிகற்ப மற்றமனேமௌனம். இந்த மௌன நிலையடைந்தவர்கள் பேசினுலும் சரி பேசாவிட்டாலும் சரி, கர்மம்செய்தாலும் சரி செய்யாவிட்டாலும் சரி, இல்லறத்திருந்தாலும் சரி துறவறத்திருந்தாலும் சரி நித்யாஸங்கரேயாவர். ஓம் தத் ஸத்.

*Published, 21st Feb, 1904, to celebrate.*

THE 76th BIRTHDAY ANNIVERSARY OF

# BHAGAVAN SRI RAMAKRISHNA PARAMAHAMSA.

## OM.

## NAMO BHAGAVATE SRI RAMAKRISHNAYA OM!

### My Soul's Prayer and Dedication to the Lord. *

(*From the Original Tamil in* 'GODWARD HO!')

LOVE, GRACE, ETERNAL FIRST,
BLISS, ESSENCE, HARMONY IN SONG,
Not thinking, not knowing Thy Infinite Glory,
Not melting in love for Thee, do I live distraught.

O' Lord, I live a life bereft of Thy Grace divine,
Truth Supreme, Thy lover, I live sunk in Darkness,
'Fire Divine', the white moon-beam of Thy cooling grace
May it fill the heart of one distraught as *I*.

My Father in Heaven, myself I dedicate to Thee,
May Thy Glory shine for ever within me that am of earth, earthy;
As the lids with care do guard the eyes for ever,
May'st Thou guard and make me worthy of Thy heavenly love.

Guard me so, that the scales of Darkness may fall off my eyes,
Guard me well, who dwell in this evanescent abode,
Guard me so, that all idea of self may fall,
Guard me Lord, through the grace of Thy enfolding Love.

Naught else of wealth exists but what Thy grace allows;
So in ignorance and conceit would I nothing do;
Nothing in fact could one do but by Grace divine
Of Thee, that mak'st the heart pure (like crystal) with [illegible]

Existence there is none bey[illegible]
As Thy Kingdom is in H[illegible]
So on Earth may Thy [illegible]
And Thy Grace Infinit[illegible]

* "பிரார்த்தனைப்பத்து[illegible]

Reign Thou in my heart and feed it with the Bread of Life;
Behold! I am poor: And wouldst Thou the cause inquire,
I want Thy grace, none else my heart desireth;
Oft defeated still I long for Thee! O' Lord, satisfy my longing and make [me Thine own.

Let Thy Mother-Love rule my heart and fill it with grace divine,
Rituals none I know my Lord! Rectify the wrong I have done! *
Let my mortal mind's confusion cease and vain illusions fall to the ground;
Sruti-lore have I none, Wisdom's Lord, yet wilt Thou not desert me.

Would it befit Thee, Lord of heaven and earth, to desert me?
Oh Lord of Word, nought there is beyond Thy Power,
Immanent Lord, how can I with mortal mind comprehend Thy truth?
Therefore save me, Lord Almighty! granting me grace for the sake of '*I*.'

The Lord be Praised! Hail to Thee my King!
Hail to the faultless Gem, the emerald Light!
Hail to the Lord that prayers grant to them that ask in faultless WORD!
Bless me Lofty one! I dedicate myself to Thee, and in sure conviction hold to Thy feet as the "SECRET of SUCCESS."

OM TATSAT.

---

**THANKSLIVING THOUGHT.**

Oh Mother Divine, Teacher and Light of Grace that to my heart is dear,
By unswerving faith in Thy grace divine did I see the Light that lighteth [every heart;
...ise to Thee that from Life Eternal hast borne me in thy WOMB,
...begot me ever before Time was, in the formless form *I AM*.

**OM NAMO NAMAH.**

SATYANANDA S. SARMA.

---

...of first Dedication.

## ஸ்ரீஇராமகிருஷ்ண விஜயம்.*

பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ண பரமஹம்ஸரது 76-வது ஜன்மதினமஹோற்சவம் இந்தமீ 21-உ கடற்கரையோரத்தில் ஐஸ்மெத்தையிலுள்ள ஸ்ரீ இராமகிருஷ்ணமடத்தில் வெகு வைபவமாகக் கொண்டாடப்பட்டது. அன்று காலை பூஜையும், பிற்பகலில் ஹரிகதையும் அதன்பின்பு சாயந்திரம் 5-மணிக்கு ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்கள் அக்கிராசனாதிபதியாக வீற்றிருக்க ப்ரொபெஸ்ஸர் கெ. சுந்தரராமய்யர், எம். ஏ. அவர்கள் ஸ்ரீ இராமகிருஷ்ணர் ஜீவியசரித்தையையும் அதிலிருந்து நாமறியவேண்டிய உண்மைகளையும் பற்றி வெகுநேரம் உற்சாகத்தோடு பிரசங்கம் செய்தனர். பிறகு மங்களஹாரத்திசெய்து உள்ளமுருக ஸ்ரீ இராமகிருஷ்ணானந்த ஸ்வாமிகள் பகவானைத் துதித்துத் தொழுதபின் பிரசாதம் வழங்கினார்கள். அப்பொழுது ஸ்ரீ இராமகிருஷ்ணபகவான் பாதபத்மங்களில் என் ஆத்மாவை அர்ப்பணஞ்செய்து அவரது அருட்பிரசாதத்துக்கு எதிர்பார்த்துநின்ற என்னிடத்தில் ஒரு நண்பர் "மஹேச குமாரசர்மா" இயற்றிய ஸ்ரீ இராமகிருஷ்ணவிஜயம் எனும் அரும்பெரும் பொருள் நிறைந்த சிறிய புஸ்தகத்தைப் புன்னகைதவழ எனக்கு அளித்தார். அதையுவந்து பெற்று, உள்ளங்கனியச் சிந்தனையிலாழ்ந்துகிடந்து தற்போதையிழந்து தடுமாறி வீடுவந்து, ஸ்ரீ இராமகிருஷணர் திருவருட் பிரஸாதத்துக்குத் தபித்த மனத்தனாயிருக்கையில், அவரது திவ்ய சரித்திரத்தில் பலபாகங்கள் உள்ளத்திருந்த உண்மையான அத்யாத்மகதாபத்தைத் தணிக்கச் செய்யும் தேவாமிருதத்துக்கொப்பாக விருந்துதவியது. நம் உள்ளனுபவத்தை வெளியிடுவதில் இங்கு பயனில்லை. அதனால் நாமடைந்த பயனைமட்டும் சொன்னோம். இவ்வித இன்பத்தை இன்னுமெத்தனையோ பேர்களனுபவித்திருப்பார்கள், அனுபவிக்கக் காத்திருப்பார்கள். நம்தொழில் உள்ளத்திற்பட்டதை யொளிக்காது சொல்ல நம்மைக் கடமைப் படுத்துவதாயிருப்பதால் உண்மையை உள்ளபடிகூறினோம். இக்காலத்திற் சிலர் மதபக்தி வாய்ந்தவர்களாயினும் தம் மதத்தைச் சிலாகித்தும் பிறமதத்தையிகழ்ந்தும்பேசுவதுசிலாக்கியமாகநினைத்திருக்கிறார்கள். இதில் முன்கண்டது கொள்ளத்தக்கதாயும் பின்கண்டது தள்ளத்தக்கதாயுமிருக்கிறது. பக்திக்கு லக்ஷணம் தன் மனது பற்றிய விடத்தில் அன்புமிகுந்து அதை பரமசிலாக்கியமாக எற்றித் தூக்கிக்காட்டுவதாம்: ஆனாலது பிறமதத்தை தூஷிக்காது. பக்தியென்பதே உண்மையான உள்ளன்பு பற்றும் பற்றுதலுக்குச் சொல்லும் பெயராயிருக்கிறது.

இந்த அன்பு பூரணமெய்தப்பெறின் அது பற்றற்றுப்பற்றின பற்றொன்றையும்விட்டு அகண்டாகாரமாய் ஆனந்தவெளியாகத் தோற்றும். இப்படிப்பட்ட அன்பு நிறைந்த பரிபூரணவஸ்து எதுவுண்டோ அதுவே தெய்வம், அதுவே ப்ரஹ்மம், அதுவே கடவுள்; "ஏகமே வாத்வதீயம்" என்னும் சுருதி வசனத்துக்கு இலக்காயுள்ளது அதுவே. அதை நாமரூபத்தால் வர்ணிக்கமுடியாது. ஆயினும் அதையே ஆயிரம்பேர்கள் சொல்லி வாழ்த்துவார்கள். நாமமேயில்லாத வஸ்துவுக்கு ஸஹஸ்ர நாமஸ்தோத்திரம் எதுக்கென்றால், பக்தனுடைய மனம்விரிந்துமலர்ந்து பக்குவமிகுதியால் அதைப் பண்பாயுணரப் பழகும் பொருட்டேயாம். "பற்றற்றவிடமேபரம்" என்றோதியள் என் இன்னருட்தாய். "பற்றற்றார் பற்றுகப்பற்றி நிற்குமவன்" என்றார் எம்பெருமானும் ஸ்ரீமணிவாசகப் பரமாசாரியரும்—"அவரன்புக்கோரளவில்லை, அருளுக்கோர் குறைவில்லை" யென்றார் இன்னொரு பக்தரும். ஹென்ரி ட்ரம்மண்ட் என்னும் அங்கிலேயமஹானும் அப்படியே செப்பியுள்ளார். தாயுமானஸ்வாமிகள் இன்னும் ரஸமாகச் சொல்லியிருக்கிறார்:—

"இனிய கருணைமுகி லெம்பிரான்
முக்கட் கனியமிர்தவாரி யின்பக்கட்டி
தனிமுதல்வன் நித்தன் பரமன் நிமலன் நிறை
வாய்நிறைந்த சுத்தன் நமக்கென்றுந்துணை"

—என்று வாயில் தேனொழுக வன்னெஞ்சும் மெழுகாக, உள்ளமுருகிப் பாடியுள்ளார். பிறவிஞானியாம் திருவள்ளுவநாயனார்,

* By Mahesh Kumar Sharma, Madras Ripen Press, crown 8vo. 80 pp. price 6 as.

"அன்பகத்தில்லா வுயிர்வாழ்க்கை
வன்பாற்கண் வற்றன்மரந்தளிர்த்தற்று"

என்று அன்பின் சிறப்பையெடுத்துச்செப்பியுள்ளார்.

ஸேன்ட் பால் என்பவர் இதே விஷயத்தைப் பற்றிஉபதேசிக்கையில் அன்பின் பெருமையையெடுத்துப்பின்வருமாறு செப்பியுள்ளார், கனம் பொருந்திய கவர்னர் இந்த வாக்கியத்தையே யெடுத்தோதி "அன்னதான ஸமாஜத்தார்" கூடிய பெருங்கூட்டத்துமுன் "சமய ஒருமை"யைப்பற்றி வற்புறுத்திப் பேசினராதலால், 1900ளு ஸெப்டெம்பர்மாசத்து விவேகசிந்தாமணியில் அவர் திருவாக்கை மொழிபெயர்த்துப் பிரசுரித்தபடி யதை இங்கு மறுபடியும் பிரசுரிக்கிறோம்; அவர் சொன்னதாவது (1 cor. xiii):—"மனுஷர் தேவர்களுக்குச் சரியாக எனக்கு நாவிருந்து அவர்களுக்கீடாகப் பேசும் வல்லமை யிருந்தும் அன்பு ஒன்றில்லாவிடத்து நான் தட்டினால் சப்தம் கேட்கும் செம்பு தவலை அல்லது சேமக்கலத்துக்கு ஒப்பாகிறேனேயன்றி வேறல்ல; நான் திரிகால ஞானியாகவிருந்து வேதமெல்லாமோதியுணர்ந்து, மந்திர, தந்திர, யந்திர சக்திகளெல்லாம் எனக்கிருந்தாலும், மலையையும் பிடுங்கிவிடும்படியான மகாசக்தியளிக்கும் நம்பிக்கை அவ்வளவுமெனக்கிருந்தாலும் அன்பு ஒன்றில்லாவிடத்து நான் பூஜ்ஜியனாகிறேன். நான்எனக்குள்ள பொருளையெல்லாம் செலவிட்டு ஏழைகளுக் கன்னமிட்டு தர்மஞ் செய்தாலும், என்னுடலையே தத்தம்செய்து அதை எரித்துவிடச் சம்மதித்தாலும், அன்பு ஒன்று மட்டுமில்லாமற் போனால் அதனால் எனக்குப்பிரயோஜன மொன்றுமில்லை.

பின்னும் அச்சஞ்சிகையில் இதைக்குறித்தெழுதியத் பின்வருமாறு: இதுவும் கவர்னர் பேசிய கருத்தையே வெளியிடுவதால் அப்படியே யெடுத்து கீழே பிரசுரிக்கிறோம்:—

"இதனால் நமது புராணங்களிலும் இதிகாசங்களிலுஞ்சொல்லு முண்மைகளையே இதர மதஸ்தர்களிலீ ஞானிகளாவோர் உள்ளபடியுணர்ந்து ஓதியிருக்கிறார்களென்பது ஸ்பஷ்டமாகும்."

"ஸத்தியம் ஜகமெல்லாவற்றிற்கு மொன்றே. பல ஜாதி மதஸ்தர்களும் மேலான உண்மையைப் பற்றிச் சொல்கையில் அவர்கள் வாக்கு சத்தியத்திற் பொருந்தியிருப்பது ஒன்றே நாமெல்லாரும் எங்கும் நிறைந்து ஏகமாயிருக்கும் கடவுளின் மைந்தர்களேயன்றி ஜாதி மதபேதத்தால் வேறுபட்டவர்களல்ல வென்பதை வற்புறுத்திக் காட்டப் போதுமானதாயிருக்க, அதையோராது, உணராது, மூடமதிகள் 'என்மதம்,' உன்மதம்' என்று சொல்லி சண்டைபோட்டு மண்டையுடைத்துக்கொள்வது என்ன பரிதாபம்."

"பேதித்த சமயமோ ஒன்று சொன்னபடி யொன்றுபேசாது"

"ஆகையால் "அன்பின்வழியறியாத என்னை" ஆட்கொண்டு ஈடேற்ற வேண்டுமென்பதே எம்மதத்திலும் உண்மையான பக்தர்கள் உள்ளத்தினின்றெழும் பேரொலியும் பிரார்த்தனையுமாக விருக்கிறது. "அன்பின்வழி யறிந்தோர் அருள்பெறுவர், அருள் பெற்றோர் தாம்பெறுவர் பேரின்பசுகமதனை," என்பது அனுபவோசிதமாய் பற்பலர் சொல்லிய பெருவாக்கியங்களின் சாரமேயன்றி வேறில்லை." (இதன் தொடர்ச்சியை வி. சி. 9-வது வால்யம் 139-முதலுள்ள பக்கங்களில் கண்டுகொள்க, செப்டம்பர் மாசத்து சஞ்சிகை.)

பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ண பரமஹம்ஸரும் என்னசெய்தனர்? யோகவழிபற்றி அவர் நாதமுடிவெய்தியபின் அவர்செய்ததை "ஸ்ரீராம கிருஷ்ணவிஜயம்" என்னும் சிறுபுத்தகத்தினின்றும் எடுத்துரைக்கிறோம் கேளுங்கள்:—

"அநந்தரம் இராமகிருஷ்ணர் கிறிஸ்துமத சித்தாந்தத்தையுணர்ந்து பக்தி யோகத்தில் ஞானநிஷ்டையில் உள்ளபொழுதெல்லாம் கிறிஸ்துவையே கண்ணுறக் கண்டு வாயாற வாழ்த்தி வந்தார். அவர் பக்தியோகத்தினால் எந்த தெய்வத்தை யாராதித்தாலும் அந்தத் தெய்வம் அவருக்குப் பிரத்தியக்ஷமாகிறது வழக்கம். அவர் தமக்கும் அத்தெய்வத்துக்கும் ஐக்கிய முண்டாவதைக்கண்டு, பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் பேதமில்லை யென பக்தியோகத்தாலும் தெரிந்துகொண்டார். * அவர் இவ்

* "ஆருத்ரா தரிசனம்—1904." என்றதலைப்பின் கீழ் சென்ற மாசத்துச் சஞ்சிகையில் இந்த உண்மை விளக்கப்பட்டிருப்பதைக் கண்டு கிரகித்துக்கொள்க.

வாறு எல்லா மத ஸம்பிரதாய ரஹஸ்யங்களையும் ஸம்பூரணமாய்த் தெரிந்துகொண்டு 'ஏகமேவாத்வதீயம்' என்னும் உபநிஷத்வாக்கியத்தின்படி அகண்ட ஸச்சிதாநந்த பரப்ரஹ்மமொன்றே யென்றும், இவ்வகண்ட ஸச்சிதாநந்த பரப்ரஹமத்தையே ஒவ்வொரு மதத்திலும் ஒவ்வொரு வடிவமாக ஆராதிக்கின்றார்களென்றும், பரஸ்பரவிரோதமாய்க் காணப்படும் இம்மதங்களெல்லாம் அப்பரப்ரஹ்மத்தை யடைவதற்காக வுண்டான பலவகை மார்க்கங்களேயென்றும் விஸ்தாரப்படுத்தினர்."

* * * * *

"இவர் ஸாதாரண விவகார நிலையில் ஸர்வஸமத்துவத்தோடு விளங்கிய தாம் அனைவருக்கும் தாஸனென்றுகூறி அகம்பாவத்தை யொழித்திருந்தார். பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் பாரமார்த்திகத்தில் பேதமில்லையென்று பூர்ணமாயறிந்து ஜனங்களனைவரையும் ஈசுவரஸ்வரூபங்களாக மதித்துத்தாம் உபதேசியென்றும் குருவென்றும் மற்றையோர் மொழிவதைக்கூட அங்கீகரியாதவராகி, தாம் ஒரு ஸாமாந்ய மனிதனென்றும் அனைவர்க்கும் தாஸாநுதாஸன் என்றும் கூறித் தமது சிஷ்யர்களுடையவும் மற்றையோர்களுடையவும் பாததூளியைத் தம் தலைமேற்கொள்வார். † ஆனல் அவருக்கு ஸமாதியில் ப்ரஹ்மஸாக்ஷாத்காரமாகும்பொழுது தமக்கும் பரமாத்வுக்கும் பேதமில்லையெனவுணர்ந்து தாமே பரப்ரஹ்மமென்றும் தாமேஸர்வக்ஞரென்றும்ஸ்ரீராம ஸ்ரீகிருஷ்ண புத்த கிறிஸ்து முதலிய மஹாபுருஷரது அம்சமே தமது அம்சமென்றும் அவர்களுக்கும் தமக்கும் பேதமில்லையென்றும் பிரசங்கிப்பார். இராமகிருஷ்ணரது பெருமையை ஜனங்கள் அறிந்ததற்கு முன்னமேயே அவர் தமக்கு அனேக சிஷ்யர்கள் உளர் என்றும், அவர்களையெல்லாம் இன்னுர் இன்னுரென்றும் அப்பொழுதே தமக்குத் தெரியுமென்றும், தாம் ஜன்மகர்மங்களற்றவரென்றும், கேவலம் பரப்ரஹ்மமேயென்றும், தாம் செய்துகொண்டுவரும் கர்மங்களனைத்தும் பாமரர்களை மகிழ்வித்து அவர்களுக்கு பக்தி மார்க்கத்தைக் காட்டும் பொருட்டு உதவும் ஸாதனங்களேயென்றும், தாம் நித்யமுக்தரென்றும் இதற்கு முன்னரே ‡மதுராநாதனுடன் சொல்லியிருந்தனராம். கூஷ்மாண்டத்து (பூஷணிக்காய்)க்கு முதலில் பிஞ்சுவிட்டு பின்னர் பூக்கள் அரும்புவதுபோல நித்திய முக்தனுக்கு முதலில் பிரஹ்மஞானேதயமாகி பின்னர் பிறர்க்குபதேசம் செய்யும்பொருட்டு சாதனங்கள் கைகூடுமென்றும் இராமகிருஷ்ணர் தம் சிஷ்யர்களுக்குச் சொல்வதுண்டு."

* * * * *

இவர் திவ்யசரித்திரத்தினின்றும் கடைசியாக ஒரு சிறு குறிப்பு எடுத்துக்கொண்டு இதைப் பூர்த்தி செய்து முடிப்போம்:— "ஸ்ரீ இராமகிருஷ்ணர் கல்வியிற் றேர்ந்தவர் அல்லர். அவருக்கு வடமொழிப்பயிற்சி சிறிதேனும் கிடையாது. தமது தாய்மொழியாகிய வங்கபாஷையிலும் அவர் போதுமான பாண்டித்திய மடையவில்லை. ஆயினும் அவர் மஹாத்மாவென்று சொல்வதற்கு எவ்வளவும் சந்தேகமில்லை. கல்விமணம் இல்லாதவர்களுக்குக்கூட பூர்வஜன்ம சுகிர்தத்தாலும் ஈசன் திருவருளாலும் ஸம்பூர்ணப் பிரஹ்மஞானம் உண்டாவது திண்ணம்.

* * * *

"பகவான் எவனுக்கருள்புரியவேண்டுமென்று ஸங்கல்பிக்கின்றாரோ அவன்தான் அவரை அடைவன். அவனுக்குத் தான் தம் ஸ்வரூபத்தைக் காட்டுகின்றார்" என்னும் கடவல்லி யுபநிஷத் வாக்கியத்தோடு இதை முடிக்கிறார்.

குருவருளின்றி உண்மையை உணர்ந்துவிடுவோமென்பார் வீணே மோசம்போவர்.

"கூனரும் கூனரும் குனிந்தபடி வானேக்கக் கூடினதொக்குமே
ஊனரு மூனரு மொன்றுபட்டுலகறியா மாயனைக் காண்டிடு மென்னலும்."

† கிறிஸ்துவும் இப்படியே அவருடைய சிஷ்யர்களுடைய பாதங்களைக் கழுவி உங்களுக்குள் மேலானவர் என்னைப்போலும் தாஸாநுதாஸனென்று பிரத்தியக்ஷமாகப் போதித்தார்.

‡ தக்ஷிணேசுவராலயம் கட்டுவித்த ராணி ராஸமணியின்மருகரும் அளவற்ற தனவந்தரும ஸ்ரீஇராமகிருஷ்ணரிடம் ஆதிமுதல் பக்திவாய்ந்தவருமாவார் இவர்.

“உய்யாரே யவருள்ளன்புண்மையில் வையாரேல்
உய்யாரே யவருள்ளுணர்தேசிகனுளக்கண் ணளியானேல்
உய்யாரே யவருள்மலம்நீங்கியுள்ளத் தமராரேல்
உய்யாரே யவருள்ளத்தமர்ந்துள்ளுணர்ச்சோதியை ஓராரேல்.”

“ஓராரே யவருடல்பெருளாவியினசை யொழியாதே
ஓராரே யவரூனுணர்வொழியாதிருவினையறுத்திடு மர்மம்
ஓராரே யவர்சத்தியாசத்தியநிலையறி சாதனமின்றி
ஓராரே யவரூனுணர்வற்றவுத்தமசித்தர்தம் வாசனையின்றியே.”

—ஆத்ம வித்யாமஞ்சரி. (Godward Ho!)

## மதவொருமையைப்பற்றி கனம் கவர்னர் பேசியது.

சென்னை அன்னதான ஸமாஜத்தர் வருஷோற்சவம் பிப்ரவரிமீ 17௨ பச்சையப்பன் மாளிகையில் மிக்க வைபவமாக நடந்தேறியது. கனம்பொருந்திய கவர்னர் லார்ட் ஆம்தில் பிரபு அவர்கள் அவர் பத்னியாரோடு வந்திருந்து அக்கிராசனம் வகித்து வழக்கப்படி முடிவில் ஒரு உபந்நியாசமும் செய்தார். இவர் சாதாரணமாய் கவர்னர் பதவியிலுள்ளவர்கள் அவர்கள் அந்தஸ்து முறையில் இப்படிபட்ட பொதுவிஷயங்களில் சிரத்தை யெடுத்துகொள்வதுபோலின்றி ஹிருதயபூர்வகமாய் தர்ம சிந்தையோடு இந்த தர்ம கைங்கிரியத்தில் மனப்பற்றுடையவராகத் தெரியவருகிறது. இவர் காலஞ்சென்ற விக்டோரியா மஹாராணியவர்கள் விஷயத்தில் பூர்ணமான பக்தி சிரத்தையுடையவர். அவருடைய ஜன்மதினமாகிய மேமீ 24௨ யன்று வருஷப்பிரதி வருஷம் ஏழைகளுக்கு அன்னமிட நிரந்தர ஏற்பாடுசெய்வதாகவாக்களித்து* அன்னதான ஸமாஜத்தில் தன்னையும் ஒரு அங்கியாகச் சேர்த்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். இதிலும் விசேஷமென்னவென்றால் இவர் தூயஹிருதயமும் உண்மையானமனப்பற்று முடையவரென்று தெரியவருகிறது. அன்னதானம் எல்லா தர்மத்திலும் சிறந்ததென்று ஒப்புக்கொண்டு ஏழைகளுக்கு அன்னமிட்டு இரக்ஷிப்பதில் கீழ்த்தேசத்துக்கும் மேற்றேசத்துக்குமுள்ள வித்தியாசத்தை யெடுத்துக்காட்டி, மேற்றேசத்தார் தர்மம் கொடுத்தால் அதற்குப் பிரதியாக அவர்களிடமிருந்து ஏதாவது வேலை வாங்க வேண்டுமென்கிற கொள்கை யுள்ளவர்களாயிருக்கிறார்களென்றும், ஹிந்துக்கள் பிரதிகோராமல் பிக்ஷையென்று வந்தவர்களுக்கெல்லாம் பாத்திரமறியாது தானங் கொடுப்பதால், பிச்சைவாங்கலையே தொழிலாகவுடைய சோம்பேரிகள் அதிகரித்துப்போகிறார்களென்றுமகாட்டி, காரியத்தில் என்னகுறையிருந்தாலும், தர்மத்தின் உத்தேசம் ஹிந்துசாஸ்திரப்படிக்கும் கிறிஸ்துவேதபடிக்கும் ஒன்றேயாக விருக்கிறதென்றும், ஆகையால் ஹிந்துக்களும் கிறிஸ்தவர்களும் புறமதசம்பிரதாயத்தில் வேறுபட்டவர்களாயிருந்தாலும் உள்மத வுண்மையில் ஒன்றுபட்டவர்களாகவேயிருக்கிறார்களென்று ஸெண்ட் பால் என்பவர் அன்பின் சிறப்பை மெச்சி அதற்குமிஞ்சி யொன்றுமில்லையென்று உபதேசித்துள்ள பாகத்தை யெடுத்துக் கூறினார். இதை 1904ஹு ஸெப்டம்பர்மீ த்து விவேகசிந்தாமணியில் சவிஸ்தாரமாக விளங்கவெடுத்துக கூறியிருப்பதோடு, “புத்திக்கெடாதது பக்திக்கெட்டும்” என்னும் இச்சஞ்சிகையின் முதல் விஷயத்துக்கு மேற்கோளாகவும் எடுத்தாண்டுளோம். இதை இங்கிலீஷில் முதற்பக்கத்தில் அச்சிட்டிருக்கக் காணலாம்.

* இவ்வாக்குப்படி 300-ரூபா மேற்படி சமாஜத்துக்கு நன்கொடை யளித்திருக்கிறார்.

## ருஷியா-ஜப்பான்யுத்தம்.

ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் சண்டையுண்டாய் பிப்ரவரிமீ 8உ திங்கட்கிழமை இராத்திரி முதல் யுத்தம் நடந்து வருகிறது. இதற்கு முன் 6-மாசகாலமாக ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் 'மஞ்சூரியா'வில் ருஷியர்கள் பிரவேசிக்கக் கூடாதென்கிற விஷயமாய் தகரார் உண்டாகி வாதமும் சமாதானமும் நடந்துவந்தது. மஞ்சூரியாவில் ருஷியர் பிரவேசிக்கக் கூடாதென்பது ஜப்பான் தேசத்தார் தீர்மானம். அதற்குமுற்றும் இணங்காமல், சாமர்த்திய சமத்காரமாய் அவர்களை யேமாற்றிவிட்டு தங்கள் கையை அந்தப் பிரதேசத்தில் பலப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பது ருஷியர்களுடைய உத்தேசம். இப்படி இருதேசத்தாரும்வாக்கு விவாதம் செய்துவருகையில் ஒருவருக்கொருவர் மனதொத்து வாராமை கண்டு இருதேசத்தாரும் சண்டைக்கு முஸ்தீப்பு செய்துவந்தார்கள். ஜப்பான் தேசத்தார் கண்டிப்பாய் எழுதிய கடிதத்துக்கு ருஷிய கவர்ன்மெண்டார் சரியான ஜவாப்புக் கொடுக்காமல் காலதாமதம் செய்து சண்டை முஸ்தீப்புகளைமட்டும் முனைந்து நடத்திவந்ததால், ஜப்பான் கவர்ன்மெண்டார் அவர்களுடைய சிநேகத்தை யறுத்துவிட்டு பேச்சுவார்த்தை சமாதான நடவடிக்கைகளையெல்லாம் கைவிட்டு, சண்டைக்குத் தீர்மானமாயிருந்தார்கள். அப்பொழுது ருஷியர்கள் கொரியாவின் வடமேற்கு எல்லையிலுள்ள யாலு நதிக்கரையில் ருஷிய பட்டாளமொன்றைக் கப்பலினின்றும் இறக்க, ஜப்பானியர் உடனே போர்ட் ஆர்தர் துறைமுகத்துக்குச் சமீபத்திலிருந்த மூன்று போர்க் கப்பல்களைத் தாக்கி அவைகளில் இரண்டைச் சேதம்செய்து மூன்றாவதையுடைத்து சமுத்திரத்தில் மூழ்கடித்து விட்டார்கள். இது 9உ யன்று நடந்தது. இந்த வெற்றியைத் தொடர்ந்து பின்னும் பல கப்பல்களையும் தாக்கி, ஒரு வியாபாரக் கப்பலையும் பிடித்துக்கொண்டு, போர்ட் ஆர்தர் துறைமுகத்துக் கெதிரிலேயே ருஷியகப்பற்படையைச் சிதற அடித்து வெற்றி வீரர்களாகச் சென்றார்கள்.

36-மணி நேரத்திற்குள் ஜப்பானியர் ஒரு ருஷிய தீவிரக்கப்பலை அமிழ்த்தி மூன்று பெரும் போர்க்கலங்களையும் மூன்று சிறு தீவிரக்கல்விகளையும் நன்றாய்ச் சேதப்படுத்தி, இரண்டு போர்க்கப்பல்களைச் சிறைப்படுத்தி, ஒரு தபால் கப்பலையும் கைக்கொண்டு. 5 ருஷிய வர்த்தகக் கப்பல்களையும் பிடித்துக் கொண்டார்கள். பின்னும் அவர்கள் சில போர்க்கலங்களுடன், ருஷியா கப்பல்கள் முன்வந்து அவைகளை வெளிக்கிழுத்துப் பின் சேதப்படுத்திச் சந்தோஷத்துடன்ஜப்பானியர்சென்றுவிட்டார்கள். ருஷியர் தங்கள் துறைமுகத்திற் கருகிலேயே தோல்வியடைய சீனாவில் வியாபாரநிமித்தம் அவர்கள் வசப்படுத்தியிருந்த 'சின்வான்டாவோ' என்னும் அவர்கள் படையிருப்புப் பட்டணத்தைக் காலி செய்த ஸ்தானத்தை ப்ரெஞ்சுக்காரர் அவர்களுக்கு நேசர்களாக விருந்து கைப்பற்றிக் காக்க உத்தேசிக்கிறார்கள். அது கூடாதென்று அங்கேயுள்ள இங்கிலீஷ் தளபதி ஆக்ஷேபித்திருக்கிறார். ருஷியாவுக்கும் பிரான்சுக்கும் சிநேக உடன்படிக்கை யுண்டாயிருக்கிறது. ஜப்பானுக்கும் இங்கிலாந்துக்கும் சிநேக உடன்படிக்கை யேற்பட்டிருக்கிறது. ஆனால் இந்த யுத்தத்தில் அவர்கள் யாரும் தலையிட்டுக்கொள்ள நிமித்தமில்லை. ருஷியாவும் ஜப்பானும் மட்டும் யுத்தம் செய்தால் மற்ற ஐரோப்பிய அமெரிக்க இராஜாங்கத்தார் ஒருதரப்பிலும் சேராது விலகியிருந்து பார்த்துநிற்பார்கள். பிரான்சுதேசத்தார் ருஷியாவோடு சேர்ந்துகொண்டால், அங்கிலேய கவர்ன்மெண்டார் ஜப்பான் பக்ஷம் சேருவார்கள். அமெரிக்கர்களும் ஜப்பானுக்கு ஒத்தாசையாகவேயிருப்பார்கள். ருஷியாதேசம் ஜனத்தொகையிலும் விஸ்தீரணத்திலும் மிகப்பெரியது. ஆனால் ருஷிய ராஜதந்திரிகள் உண்மைக்கும் சத்தியத்துக்கும் அவ்வளவாகக் கட்டுப்பட்டவர்களல்லவென்று காட்டியிருக்கிறார்கள். ஜப்பான்தேசம் உருவத்திலும்விஸ்தீரணத்திலும்சிறியதாயினும், அத்தேசத்தார் மனோதைரியத்திலும் உண்மைக்கொத்து நடப்பதிலும் சத்தியமே ஜயமென்னும் உறுதியிலும் சிறந்தவர்கள். போர்வன்மையில் ருஷியருக்குப் பின்னடைந்தவர்களல்ல, கப்பற்படையில் மிகச்சிறந்தவர்கள். ருஷியர்களுக்கு கப்பற்படை வன்மையும் சாமர்த்தியமும் போதாது. 1894-95-ம் வருஷத்தில் ஜப்பான் சீனா தேசத்தோடு யுத்தம் செய்து வெற்றிபெற்று கொரியாவைத் தன்

வசமாக்கிக்கொண்டது பிரசித்தம். இப்பொழுது ருஷியாவோடு யுத்தம் செய்யத் தலைப்பட்டு இதுவரையில் அதிசாமர்த்தியமாயும், அதிபராக்கிரமமாயும் நடந்துகொண்டிருக்கிறது. ஸத்யம் தங்கள் பக்ஷத்திலிருக்கிறதென்கிற மனோபலத்தினால் துணிந்து உண்மைக்கு ஒத்து நடந்தால் ஒரு குறையும் வாராது என்கிற கொள்கையில் பூர்ணநம்பிக்கையோடு துராகிரதத்துக்கிடமன்னியில் சத்விஷயத்தில் சண்டை துவக்கியிருப்பதால் அவர்கள் எப்படியும் ஜயம் பெறுவார்களென்று நம்பியிருக்கிறார்கள். கடவுளும் தர்மமே தலையெடுக்கச்செய்வது சத்தியமாதலால் அவர்கள் நல்ல எண்ணத்துக்கொப்ப நல்ல ஜயம் கிடைக்குமென்று உலகத்திலுள்ள சத்ருக்களெல்லாரும் சிந்தித்துப் பிரார்த்திக்கிறார்கள். இந்த நற்சிந்தனையினாலும், பிரார்த்தனையினாலும் அவர்களுக்கு தெய்வானுகூலம் அதிகமாகவுண்டாகு மென்பதிற் சந்தேகமில்லை. "தெய்வம் காட்டுமேயன்றி ஊட்டாது" என்று அவர்களுக்குநன்றாகத் தெரியுமாதலால் அவர்கள் தெய்வானுகூலத்தையே நம்பியெதிர் பார்த்திருக்கவில்லை. தங்களுடைய நோக்கமும் சிந்தையும் நல்லதாயிருப்பதால் தங்களுடைய முயற்சியும் நல்லதாகவே முடியுமென்று நம்பி அதற்கு வேண்டிய முயற்சிகளை எக்கம் தூக்கமின்றி அதிக ஊக்கத்தோடும் ஜாக்கிரதையோடும் செய்துவருகிறார்கள்.

பிப்ரவரிமீ 18உ வரையில் நடந்த சண்டையில், ஜப்பானியர்களே ஜயசீலர்களாக விளங்கியிருக்கிறார்கள். ருஷியர் இன்னும் சண்டைக்கு முற்றும் ஆயத்தமானவர்களாகத் தோற்றவில்லை. அவர்கள் கடற்சைனியமும் கப்பல்களும் ஜப்பானியர் கப்பல்களுக்கும் சைனியத்துக்கும் எதிர் நிற்கத்தக்கவையல்லவென்று நன்றாக விளங்கிவிட்டது. ஜப்பானியர் ருஷியர்களை போர்ட் ஆர்தர் என்னும் அவர்கள் துறைமுகத்துக்குள் மடக்கியடித்திருக்கிறார்கள். கடற்சண்டையினால்மட்டும் இந்த யுத்தம் தீர்வதாயில்லை. நிலத்தில் ருஷியர்களுக்கு சைனிய பலம் ஜாஸ்தி. ஜப்பானியரும் இந்தப் போர் சம்பந்தப்பட்ட அளவில் அவர்களுக்கு இளைத்தவர்களாகக் காட்டவில்லை. கொரியாவின் வடமேற்கு மூலையிலுள்ள யாலு நதிக்கரையோரத்தில் இருதரத்தார் சைனியங்களும் கைகலந்து போர்செய்யும். அந்தச் சண்டை முடிவின்மேல் இந்த யுத்தத்தில் தரையில் யார் கை ஓங்குமென்பதுதெரியும். ருஷியாவில் உட்கலகம் ஒரு பக்கத்தில் தோன்றியிருக்கிறதாகத் தெரிகிறது. 'சின்வன்டா' கோட்டை விஷயமாய் உண்டான தகரார் ஒருவருக்கும் மனஸ்தாபத்துக்கிடமின்றி இராஜியாக முடிந்துவிட்டது. தந்திசமாசாரங்கள் தினம் வந்துகொண்டிருந்தாலும் உண்மை உள்ளபடி யெளிதில் வெளியாவதில்லை. ஏனெனில் ருஷியர் ஜப்பானியர் ஆகிய இருதரத்தாரும், அவரவர் படைகளின் இருப்பு போக்குவரத்து சமாசாரங்களை வெகு ரகசியமாக மூடிவைத்துக்கொண்டு தந்தி சமாசாரம் வெளியேறவிடாமல்பார்த்து வருகிறார்கள். அவர்கள் மேற்பார்வைக்குத் தப்பி வெளிவரும் சமாசாரங்கள் நம்பத்தக்கவையாகவில்லை. முதனாள் வந்த தந்தி சமாசாரம் மறுநாள் பிசகுஎன்று ஏற்படுகிறது. இப்படி போர்ப்புரளி, பொய்ப்புரளி ஜாஸ்தியாகவிருக்கிறதினால் இன்றைக்கு வந்த சமாசாரம் நாளைக்குப் பொய்யாவது சகஜமாயிருக்கிறது. இதுவரையில் உண்மையாகநடந்த சமாசாரம், 18-உ வரையில் முக்கியமாக நாம் மேலேஉரைத்தபடியிருக்கிறது. இங்கே ஒரு பட்டணத்தைச் சுட்டெரித்துவிட்டார்கள்: அங்கே ஒரு கப்பற்படை முழுகிப்போய்விட்டதென்று மற்றபடி வந்த சமாசாரங்களெல்லாம் வீண்புரட்டாக ஏற்பட்டுவிட்டன. ருஷியர் இந்தியாவின் மேல் படையெடுக்க சித்தம் செய்துவருகின்றார்களென்றும் ஒரு வதந்தியுண்டாயிற்று. இதெல்லாம் நம்பத்தக்கதாகவில்லை. ஆனால் யுத்தம் நடப்பதில் எந்த சமயத்தில் எதுநேரிடுமோ சொல்ல சாத்தியமில்லை. எல்லாரும் ஜாக்கிரதையாய் என்னநேர்ந்தாலும் அதற்குவேண்டிய முயற்சி யெடுத்துக்கொள்ள சித்தமாயிருக்கிறார்கள்.

[பின்வந்த தந்திசமாசாரத்தால் ஜப்பானியர் 24உ போர்ட் ஆர்தர் துறைமுகத்தைப் பிடித்துக்கொள்ளவோ அல்லது அத்துறை முகத்தைவிட்டு ருஷிய கப்பல்கள் வெளிவாராதபடி அதன் முகவாயில் வெடிகுண்டுகள் நிறைந்த கப்பல்களை முழுகச்செய்து தடுக்கவோ யத்தனித்தார்களென்றும் அது பலிக்காமற் போய்விட்டதென்றும்தெரியவருகிறது. 26-உவரையில் வேறு விசேஷசமாசாரம் ஒன்றும் வரவில்லை.]

மார்ச்சுமீ 1உ போர்ட் ஆர்தருக்குப் புதிதாய் நியமிக்கப்பட்ட ருஷிய கப்பற் படைத்தலைவர் வந்து சேர்ந்தார். இவர் கப்பல் சண்டையில் மஹா சாமர்த்தியமுள்ளவரென்று பேர் வாங்கினவர். இவருடைய அதிகாரத்தின்கீழ் ருஷிய கப்பற் படை வெகு நேர்மையாய் நின்று சண்டைபுரியுமென்று சொல்லிக்கொள்கிறார்கள். ஆனால் கப்பல்கள்தான் மிகச் சேதமாய்விட்டன.

---

## EXTRACTS.

### INDUSTRIAL EXHIBITION.

### கைத்தொழிற் பொருட்காட்சி.

பத்தொன்பதாவது இந்திய காங்கிரெஸ் சபைக் கூட்டத்தின் சம்பந்தமாய் ஏற்பட்ட காட்சியானது சிறந்தவிதமாய் நடத்தப்பட்டது என்பதற்கைய மில்லை. 'கத்திட்ரல் அவுஸ்' தோட்டத்தின் முன்புறத்தில் பல கொட்டகைகள் அமைக்கப்பட்டன. அவற்றைப் பலவித வர்ணச் சீலைகளும், அழகிய திரைகளும் தொங்கல்களும் கட்டி அலங்கரித்திருந்தார்கள். இரண்டு முக்கியவாசல்கள் காட்சிச்சாலைக்கு அமைத்திருந்தனர். வெளி அமைப்பும் அழகும் உள்ளிருந்த சாமான்களின் சிறப்பும் வனப்பும் ஒத்திருந்தது. காட்சிக்கு வந்த பொருள்களில் சிறிய பரிமாணம் உள்ளவற்றை மரக்கம்பங்களைச்சுற்றி ஏற்படுத்திய படிக்கட்டு வரிசைகள்மேல் ஒழுங்காய் வைத்திருந்தனர். சுதேசராஜ்யங்களின் பொருட்களையும் சாமான்களையும் வைக்க பிரத்தியேகமான இடங்களும், மைசூர் நாட்டுக்கென்று வலப்பக்கமும் விடப்பட்டிருந்தது. வந்திருக்கும் பொருட்களை வகை வகையாய்ப் பிரித்து வைத்திருப்பதால் பலவிடத்து மாதிரிகளையும் ஒப்பிட்டுப்பார்க்க அநுகூலமாய் இருக்கின்றது.

#### மைசூர்ப் பொருள்கள்.

காட்சி ஸ்தலத்தில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பாகம் மைசூர்ப் பாகமாய் இருக்கின்றது. அதற்காய் ராவ்பகதூர் சி. மாதய்யா முதலியோர் மைசூரிலிருந்து ஸ்பெஷலாய் வந்திருக்கிறார்கள். மைசூர்ப் பொருள்களில் முக்கியமானவை உலோகப்பொருள்களும்; தந்தம், மரம் இவற்றில் உள்ளிட்ட சித்திர வேலைப்பாடும்; கல், மரம் இவற்றில் செதுக்குச் சித்திரவேலையும், வெள்ளி; சந்தனம் இவற்றில் அலங்கார அமைப்பும் சித்திரவேலைப்பாடுமாம். முதல்மாதிரிப்பொருள்களில் பல மைசூர் அரமனையிலிருந்தும் வந்தவையாம், தந்த வேலைப்பாடுள்ள செம்மர விளக்கும், மேஜைகளும், நாற்காலிகளும், வீணையும் மற்றும் பலவித சாமான்களும் வந்திருக்கின்றன. இதல்லாமல் கிருஷ்ணனும் கோபிகைகளும் களித்துநிற்கும் சித்திரம் செதுக்கிய சந்தன வாசற்கதவொன்றும் இருக்கின்றது. அது மிகவும் அலங்காரமாய் அமைந்ததாம். மாக்கல்லில் தூண்கள் மூலைக் கட்டுகள் முதலிய சித்திரிக்கப்பட்டு பெருங்கட்டடங்கட்கு மாதிரிபோல் இருக்கின்றன. மாக்கல்லில் யானை முதலிய செய்திருக்கும் வேலைப்பாடு புகழத்தக்கதாம்.

#### வெள்ளிச் சாமான்கள்.

வெள்ளி நடராஜ விக்கிரஹமொன்று அதிக தேஜஸும் அலங்காரமும் அமைந்ததாய் விளங்குகின்றது. குதிரைமேல் நிற்கும் குதிரைப்பட்டாள ஆபீசர் ஒருவர் தொப்பியுடன் சகல ராணுவ உடுப்பும் தரித்துநிற்கும் பிரதிமையும் இருக்கின்றது. அது இலக்டிரிக் கிலிட்டு செய்யப்பட்டதாம். இதுவுமல்லாமல் ஒரு அழகிய பெரியதட்டும், இரண்டு வந்தனோபசாரப் பத்திரிகைப் பெட்டிகளும், சுவாமிகளின் பிரதிமைகள் இலங்கும் ஒரு பெரிய கிண்ணமும் இருக்கின்றது. தந்த சாமான்களும் நல்ல வேலைப்பாட்டைக் காட்டுகின்றன.

#### மரவேலை.

பெங்களூர், மைசூர், ஷிமுகா இவற்றினின்றும் சந்தனமரத்தில் செதுக்கு சித்திரவேலை உயர்தரமானவிதமாய்ச் செய்த சில சாமான்களும் இரண்டு அழகிய பெட்டிகளும் வந்திருக்கின்றன.

#### நெசவு சாமான்கள்.

மேல்கோட்மாதிரி பருத்தி நெசவுத் துணிகளும், பல பட்டு துப்பட்டாக்களும் வந்திருக்கின்றன. சில அழகிய நிறமும் மாதிரியுமுள்ள சீன்காப் பட்டுப் புடவைகளும் வந்திருக்கின்றன.

#### காட்டு விளைபொருள்கள்.

பலவித விதைகளும், வேர்களும், கிழங்குகளும் உண்டு. நூறுவகை நார்கள் இங்கே காட்டப்பட்டிருக்கின்றன. இவை பலவகை நிறமும் பலமும் பெற்றவையாம். இதல்லாமல் பலவித எண்ணெய்க் கொட்டைகளும், மைசூர் நாட்டில் பயிராகும் நஞ்சை புஞ்சைத் தானியங்களும் வைத்திருக்கின்றது. மேலும், பல காப்பித்தோட்டக்காரர்கள் காப்பிக் கொட்டை தினுசுகள் அனுப்பியிருக்கிறார்கள். மைசூரில் விளையும் ஏலம் முதலிய வாசனைப் பொருள்களும் வந்திருக்கின்றன.

சென்னைச் சித்திரவேலை வித்தியாசாலையினின்றும் பலபொருள்கள் வந்திருக்கின்றன. இவற்றில் உலோகவேலையும், மரச்சாமான்களும், துணிவகைராக்களும் இருக்கின்றன. வெள்ளி விளக்குத்தண்டுகளும், மசிக்கூண்டுகளும், பித்தளைப் பிரதிமைகளும், தட்டுகளும், நம் அரசரின் அரைவரை உருவமொன்றும் வந்திருக்கின்றன. மரச்சாமான்களும், யானைக்கால் மேஜையும், கருங்காலிப் படச்சட்டம் முதலிய பல அழகிய சாமான்களும் உண்டு. இதல்லாமல் வித்தியாசாலைத் தறிகளில் செய்த சரிகை போட்ட பருத்தி அங்கவஸ்திரங்களும், நல்ல இழைத் தலைகுட்டைகளும், பட்டுத்துணியும் வைக்கப்பட்டு இருந்தன. நாட்டு ஆட்டுத்தோல் மாட்டுத்தோல்களைப் பதனிட்டு வர்ணமிட்ட மாதிரி முதலியவற்றைக் குறித்தும் கவனிக்கலாம்.

ஜமக்காளம், கம்பளம், போர்வைகள்.

ஜெயப்பூர் ஜெயிலினின்றும் சில அழகிய கம்பளங்கள் உண்டு. வேலூர் ஜெயிலினின்றும் கற்றாழை நாரினின்றும் செய்த சில நல்ல கம்பளங்கள் ஜமக்காளங்கள் வந்திருக்கின்றன. ஐதராபாத்தினின்றும் கிருஷ்ணமாச்சாரி அவர்கள் ஒரு அழகிய கம்பளம் அனுப்பியிருக்கிறார்.

பருத்தி, ரோமம், பட்டு, நார் வஸ்திரங்கள்.

பங்காளத்தினின்றும் சில அழகிய பட்டுக்கள் வந்திருக்கின்றன. இவற்றில் சில ஐரோப்பிய உடுப்புக்கும் ஏற்றவையாம். சென்னைவர்த்தகர்களும் காசிக்கடைக்காரரும் சரிகைப் பூப்பட்டாடைகளும், துப்பட்டாக்களும் புடவைகளும் அனுப்பியிருக்கிறார்கள். சித்திரப்பூத் தையல்வேலையில் சென்னை தாதாகான் பிராம்ஜி இவர்களிடமிருந்து வந்திருக்கும் வஸ்திரமாதிரிகள் அழகானவை. சேலத்தினின்று பட்டு அங்கவஸ்திரங்களும், கும்பகோணத்தினின்று சரிகைத்துணிகளும், கோயம்பத்தூர் ஜெயிலினின்று துவால்குட்டைகளும் போர்வைகளும், செங்கல்பட்டு ரிபார்மேட்டரி பாடசாலையினின்று சில சாதாரண துணிகளும் வந்திருக்கின்றன. சில பட்டு சாயமேற்றிய நூல் மாதிரிகளும் வந்திருந்தன. காக்கிநாடாவிலிருந்து வெள்ளைத்துணியில் சிறிய பூப்போட்ட அழகிய சீட்டிப் புடவைகள் வந்தன. திருச்சிராப்பள்ளியினின்றும் கொக்கிப் பூப்போட்ட பட்டுத்துணிகளும், நாகர்கோவில் கைத்தொழிற் பாடசாலையில் இருந்து வாழை நாரும் பருத்திநூலும் கலந்து நெய்த சில துணிகளும், மதுரையினின்று அங்கவஸ்திரங்கள், புடவைகள், சரிகைத் தலைகுட்டைகள், கழுத்துப் பட்டைகள், பொன்சரிகை, சிவப்புப் பட்டு கச்சைகள் முதலியவும் வந்திருந்தன. இங்கிலீஷ் சாமான்களுக்கு இணையானவையாயிருந்த சில கம்பளிகளும் போர்வைகளும் "லால் இம்லி" வர்த்தகப்பெயர்க் கம்பனியாரிடமிருந்து வந்தன. பின்னி கம்பனியாரும் தங்களுடைய மில்லுகளிலிருந்து மிருதுவான 'டுவில்' துணிகளும், அனுப்பியிருந்தார்கள். இதல்லாமல் அந்த மில்லுகளில் செய்த நூல்மாதிரிகளையும் அனுப்பியிருந்தார்கள்.

மண் பாத்திரங்கள்.

இவற்றில், அழகிய மாதிரிகளில் செய்த பல உதயகிரியினின்றும் வந்திருந்தன. வடஆற்காட்டினின்றும் வந்த நல்ல பச்சையில் வர்ணம் தீர்த்த கலங்களும் நேர்த்தியானவையே.

பித்தளை, செம்பு முதலியவற்றால் செய்த பாத்திரங்களும் மற்றப் பொருள்களும்.

கொச்சியிலிருந்து சில வெண்கலச் சாமான்களும் விக்கிரகங்களும் வந்திருந்தன. தஞ்சாவூரினின்று பழையமாதிரி செம்புகளும் தட்டுகளும், ஐதிராபாத்தினின்றும் ஜெயபூரினின்றும் சில மாதிரிகளும் வந்திருந்தன. பலவித விநோதப் பூட்டுகளும் கெட்டிப் பெட்டிகளும் வந்திருந்தன. சேலத்தினின்றும் அருணசலமென்பவர் எஃகினால் செய்த சில நேர்த்தியான சாமான்கள் அனுப்பியிருக்கிறார். எட்டியாபுரம் ராஜாவினிடத்திலிருந்து இரண்டு அழகிய அங்குசங்கள் வந்திருக்கின்றன; இவை கவனிக்கத்தக்கவையாம்.

மரத்தின்மேல் அரக்குவேலை.

ஐதராபாத், கடப்பை, பங்கனபல்லி இவற்றினின்றும், வந்திருக்கும் சாமான்களில் வீண் டம்பமான வர்ணவேலை ஏற்றுவதாய்த் தெரியவருகிறது.

மரவேலைகளும் சாமான்களும்.

மதுரைக் கைத்தொழிற்சாலையினின்றும் வந்திருக்கும் சாமான்கள் நல்ல வேலைப்பாடுள்ளவை. சென்னை அஞ்சுமன்சாலையினின்றும் சில சாமான்கள் வந்திருந்தன. அவை சிறுபிள்ளைகளால் செய்யப்பட்டவையாம்.

## வெளிக்காட்சிப் பொருள்கள்.

காட்சி வைத்திருக்கும் தோட்டத்தில் வெளிப்புறத்தில் யந்திரங்களும், பம்புகள், கவலை ஏற்றங்கள், கலப்பைகள், செக்குகள், சூழ்ச்சிகள் முதலிய பலவற்றைக் காணலாம். சென்னை மைலாப்பூரில் எஞ்சினீர்களாகிய D. ராஜு கம்பெனியார் உலக்கை உரல்மாதிரியில் வேலைசெய்யும் இரண்டு நல்லெண்ணெய்ச் செக்குகள் அமைத்து அதைக் கிரிஸன் எண்ணெய் இட்டு எரிக்கும் ஒரு யந்திரத்தினால் இயக்கி வேலைசெய்து காட்டினார்கள். இதன்றியும் இக்கம்பெனியார் தண்டவாள வார்ப்பட நாற்காலிகள், பெஞ்சுகள், கேட்டுகள், கிராதிகள் ஆகிய சில சாமான்களும் காட்டியிருக்கின்றார்கள். இதற்கு வடபுறத்தில் மிஸ்டர் சுப்பராவு அவர்கள் செய்த வொருவகைப் பலகைமேல் கவலையேற்றம் அமைத்திருக்கிறது. இதில் ஏறி மிதிப்பதினால் நீர் ஏறுகின்றது. இதே சூழ்ச்சியினால் கரும்பாலைகள் அல்லது செக்குகளையும் வேலைசெய்யலாமென்று அவர் அபிப்பிராயப்படுகிறார். வியாசர்பாடி மாசி கம்பெனியார், எண்ணெய் எஞ்சின் வைத்து நீர்ப்பம்பினால் தண்ணீர் இறைக்கும் விதம் காட்டியிருந்தார்கள். இன்னொருபுறத்தில் ம-ா-ா-ஸ்ரீ. சென்னை நம்பெருமாள் செட்டியார் ஏற்படுத்த விரும்பும் ஒற்றைத் தண்டவாள டிராம்பாதைமேல் செல்லும் வண்டியொன்று மாதிரிக்காய்ச் செய்து, கொஞ்சதூரம் தண்டவாளக் கம்பியிட்டு நிறுத்தியிருந்தது. சைதாப்பேட்டை விவசாயக் கலாசாலையினின்றும் சீமைக் கலப்பை மாதிரிகளும், கொறுகலப்பையும், பரம்புமுதலிய கருவிகளும், ஆழக்கொத்தும் கருவியும், புடைக்கும் யந்திரமும், பால் தயிர் கடையும் சூழ்ச்சிகளும், வெண்ணெய் முதலிய எடுக்கும் புதுவகை மத்துகளும் அனுப்பியிருந்தது.

சென்னைச் சித்திரவேலை வித்தியாசாலைப் புதுவகைத் தறிகள், அங்கவஸ்திரம், தலைக்குட்டை முதலிய நெய்யும் மாதிரிகள் காட்டியிருக்கின்றன. இவற்றில், அதிக அகலமான துணி நெய்கையில் சாதாரணமாய் நாடாவைப் போட்டு வாங்க இரண்டுபேர் தேவையிருக்கும் வழக்கமில்லாமல் ஒரே ஆள் நெய்யக்கூடியதாய் அமைக்கப்பட்டிருக்கின்றது. இதல்லாமல் மதுரையினின்றும் சித்திரக் கரைகளும் முந்தானைகளும் சில நெம்புகளால் வேண்டியபடி கரைபோட அநுகூலமமைந்த கைத்தறியொன்றும் வந்திருக்கின்றது.

வீரபத்திர நாய்க்கர் என்பவர் சுழல் ஏற்றம் ஒன்று அனுப்பியிருக்கிறார். Plumbe என்னும் ஒரு துரை நீராவி யந்திரமொன்று செய்தனுப்பியிருக்கிறார். பம்பாயினின்றும் பவல் கம்பெனியார் பலவித ரணவைத்திய சிகிச்சைக்கேற்ற கருவிகளும், பொய்க்கால் கை முதலியவையும், பல் பிடுங்கும் குறடு முதலிய பல வைத்திய கருவிகளும் அனுப்பியிருக்கின்றார்கள். வேலூர் ஜெயிலினின்றும் அதன் சூபரின்டெண்டாகிய மக்ரீடி துரை ஒரு அழகிய சிறு கூடாரம் அனுப்பியிருக்கிறார்.

கோயமுத்தூர் காட்டிலாக்கா கன்சர்வேடரும், காகிநாடா, ஆதோனி முதலியவிடத்துத் தாசில்தாரர்களும் காட்டுப் பொருள்களில் பலவகை நார்களும், பலவகை மரமாதிரிகளும், அனுப்பியிருக்கிறார்கள். கொச்சியினின்றும் வந்த சாமான்களுடன், பாய்கள், கூடைகள், கைப்பெட்டிகள் முதலிய சில கூடியிருக்கின்றன. அபிரகத்தில் சில பொருள்கள் செய்யப்பட்டு சென்னை குடூஸ் பாட்சா சாயபுவினிடமிருந்து வந்திருக்கின்றன. இதனால் அபிரகம் என்னென்ன வேலைக்குதவுமென்று ஒருவாறு ஊகிக்கலாம்.

கன்னனூர் பேசல் மிஷனரின் செக்குகளையும், துப்பட்டி துவால்களைப்பற்றியும் கேள்விப்படாதவர் இல்லை. இங்கு அவற்றின் புகழுக்கும் பெருமைக்கும் ஏற்றபடியே சாமான்களும் வந்திருக்கின்றன. பஞ்சாப் கம்பெனியார் சில சாதாரண மாதிரிச் சால்வைகளும் ராம்பூர் கெட்டிப் போர்வைகளும் அனுப்பியிருக்கிறார்கள்.

துவையல்கள் ஊறுகாய்கள் பச்சடிகள் சம்பாரப் பொடிகள் முதலிய பலவும், பலவித எண்ணெய்களும், காப்பி புகையிலை இவற்றின் மாதிரிகளும், சர்க்கரை மாதிரிகளும், சாராய வகைகளும், சுருட்டு மாதிரிகளும் வந்திருக்கின்றன. புதுக்கோட்டை திவானவர்கள் 100 வித மருந்துச்செடிகளும், மஞ்சம்புல் எண்ணெயும் மாதிரிக்காய் அனுப்பியிருக்கிறார். சென்னை மிட்டாய்க் கடைக்காரராகிய ஹாரிசன் கம்பெனியாரும், கூம்ஸ் கம்பெனியாரும் சில அலங்கார மிட்டாய் மாதிரிகள் அனுப்பினார்கள். எழும்பூர்

ஸ்டேஷனுக்கு எதிரிலிருக்கும் கிறிஸ்தவ ஆலயத்தின் மாதிரியில் ஸ்தூபியுடன் நேர்த்தியாய்ச் செய்த ஒரு சர்க்கரைப் பணிகாரமும் வந்திருந்தது.

தோல், கொம்பு, காகிதம்.—இம்மூன்று பொருள்களிலும், வடநாட்டுப் பொருள்கள் நம் தென்தேசத்தியவற்றிலும் சிறந்தவையென்று பார்த்தவுடனேயே சொல்லிவிடக்கூடும். திருவொற்றியூரில் தோல் பதனிடுஞ் சாலையொன்று புதிதாய் அமைத்திருக்கும் மிஸ்டர் டாலடி என்னும் பார்சியர் தம் சொந்த முறையில் செய்திருக்கும் சில மாதிரிகள் அனுப்பியிருந்தார். மொராக்கோ தோல்கள், ஜீனி ஹார்னஸ் முதலியவையும் இருப்பு டிரங்குகளும் வந்திருக்கின்றன. இவற்றின் விலையும் சரியாகவேயிருந்தது. இவை நல்ல வேலைப்பாடுள்ளவையாம். S. P. C. K. அச்சுக்கூடத்தினின்று புஸ்தக பயிண்டு மாதிரிக்காய் ஒரு மாதிரி வந்திருந்தது. மற்றவர்களிடத்திருந்து ஒன்றும் வரவில்லை அந்தப் பயிண்டு வேலையில் புத்தக மூடி நன்றாய்ச் செய்யப்பட்டிருந்தது.

கல்கத்தா கம்பெனியாராகிய பரன் கம்பெனியார் தங்கள் மட்குழாய்கள் செங்கற்கள் சதுரக்கற்கள் முதலியவற்றை அனுப்பியிருக்கிறார்கள். பேசல் மிஷனரும், பிரோச்சிலிருக்கும் ஹென்சி கம்பெனியாரும் அனுப்பியிருக்கும் தரைக்கற்கள் அதிக அழகான மாதிரிகளும் நல்ல நிறத்துடன் செவ்வையாய் வேலை தீர்க்கப்பட்டவையுமாம். சிமிட்டி ஓடுகளும் கற்களும் அழகானவையே.

வந்த ரசாயனப் பொருள்களில், ஆயுர்வேத வைத்தியத்துக்கேற்ற மருந்துகளும், கல்கத்தாவினின்று போஸ் என்பவர் சில வாசனைத் திரவியங்களும், சென்னை ரஹிமான் அண்டு சன்ஸ் கம்பெனியார் சில நேர்த்தியான அத்தர் முதலிய வாசனைத் திரவியங்கள் முதலியவும் அனுப்பியிருந்தார்கள். பங்காளத்து சவுக்காரச் சாலையினின்றும் பலவகை சோப்புகள் வந்திருக்கின்றன. இந்தியாவில் செய்யும் நெருப்புக் குச்சி மாதிரியும், பலவகை மசிகளும், பலவித நிறத்திலும் உருவத்திலும் அமைந்த மெழுகுவர்த்திகளும் குஜராத் நாட்டினின்றும் வந்திருக்கின்றன.

மரச்சாமான்களில், மைசூர்ப்பிரிவில் சந்தன மரத்தில் நம் வைசிராய் அவர்களின் உருவம்போல் செய்து இக்காட்டிய மாதிரியொன்று வந்திருந்தது. அதில், அவர் ஏதோ ஆழ்ந்த யோசனையிலிருப்பதுபோல் காட்டியிருக்கின்றது. நம் கவர்னர் அவர்கள் ஒரு அழகிய தேக்குமரத்தினலாய மேசையனுப்பியிருந்தார். இந்த மேசையானது, அவர்க்கு மதுரைக் கைத்தொழிற் சாலையில் செய்யப்பட்டதாம். சென்னையில் முன் பேர்பெற்ற மரவேலைக்காரராகிய டிஷாம் கம்பெனியாரும் சாமான் அனுப்பியிருக்கிறார்கள். வக்கீல்களுக்கு எழுதும் மேசை என்றொரு அழகிய மேசை வந்திருந்தது. இதல்லாமல், கட்டிலாகவும், சோபாவாகவும், மேசையாகவும், இரட்டை நாற்காலியாகவும், பணப்பெட்டியாகவும், துணிப்பெட்டியாகவும், டபன் அல்லது போசனப் பெட்டியாகவும் உபயோகிக்கக் கூடியதாய் ஒரு சாமான் வந்திருந்தது. இது கொஞ்சம் பளுவான பெரிய சாமான். இதைச் செய்திருக்கும் யுக்தியை வேறு வழியில் செலுத்தியிருந்தால் செய்தவனுக்கு இலாபங்கிடைக்கும் என்பது நிச்சயம்.

கரூரிலிருக்கும் வெஸ்லியன் மிஷன் பாடசாலையினின்றும் சில சாமான்கள் வந்திருந்தன.

விசித்திரப் பொருள்கள்.

திருச்சினப்பள்ளியினின்றும் கடைப் பொம்மைகளும் சித்திர மாதிரிகளும் வந்தன. விசாகப்பட்டணத்திலிருந்து சந்தனமரக் கைகப்பெட்டிகளும் சிறு மேசைகளும் செய்து வந்திருந்தன. திருவனந்தபுரத்தினின்றும் சில தந்தப்பொருள்கள் நல்ல வேலைப்பாட்டுடன் அனுப்பப்பட்டிருக்கின்றன. ஜெயபுரத்துச் சலவைக்கல் விக்கிரகங்களும் பொம்மைகளும் ஏராளமாய் வந்திருக்கின்றன. சென்னை வெங்கய்ய பிரதர்ஸ் காட்டிய புகைப்பட மாதிரிகளும், இராஜா இரவிவர்மாவின் படங்களும், பரோடாவினின்று ஒரு அழகிய படமும் வந்திருக்கின்றன.

அழகிய இரதங்களும், சவாரிப்பல்லக்குகளும் உல்லாசகாடிகளும் இக்காட்சிக்கு வந்திருப்பதில் ஆச்சரியமில்லை. சென்னை சிம்ஸன் கம்பெனியார் 6-இரதங்கள் அனுப்பினார்கள். இவற்றில் இரண்டு இராஜ இரதங்களாம். சென்னை ஆலி பிரதர்ஸ் கம்பெனியார் அனுப்பிய வண்டிகளும் நன்றாய்ச்செய்து அழகிய வேலைப்பாட்டுடன் விளங்குகின்றன. பம்பாயினின்றும் சுதேச கனவான் ஒருவர் அனுப்பிய இரண்டு இரதங்களும் வந்திருக்கின்றன. இவற்றில் ஒன்று, கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருக்கும் ஸ்பிரிங்குகளினால் மாயமானவிதமாய்த் திடீரென்று

மேல்மூடியிறங்கக்கூடியதாய்ச் செய்யப்பட்டிருக்கின்றது.—தி. வ.

---

EXTRACT

Resolutions of the Social Conferance.

## ஆசாரச்சீர்திருத்த மஹாசபையார் செய்த தீர்மானங்கள்.

---

1. மிஸ்டர் எ. சுப்பராவு, ராவ்பகதூர் சபாபதி முதலியார், மகாராஜா கஜபதிராவு, ராவ்பகதூர் ஜி. ஜி. கோக்கலே இவர்கள் காலஞ்செய்ததற்காய் கூட்டத்தார் விசனமுறுவதாய்த் தீர்மானம்.

2. இந்நாட்டிலிருக்கும் பல வருணத்தின் உட்பிரிவாரும் தங்களுக்குள் பந்தி போஜனமும் கலியாண சம்பந்தமும் ஏற்படுத்திக்கொண்டு ஒன்றாய் இணைதல் அவசியமென்றும் தீர்மானம்.

3. தற்காலம் பிளேக் பஞ்சம் முதலியவற்றின் கொடுமையால் நாட்டின் பல பாகங்களிலும் கல்விக் குறைவு ஏற்பட்டதும், பெண்கல்வி தடைப்பட்டு நின்றதும் தெளிவாயிருப்பதால், இராஜாங்கத்தார் இன்னும் பாடசாலைகள் பிரசங்கங்கள் முதலிய ஏற்படுத்தி தற்காலம் கருணையுடன் இவ்விஷயத்திற்காய்ச் செய்துவரும் காரியங்களையும் முயற்சிகளையும் அதிகமாக்கும்படி இராஜாங்கத்தாரை வேண்டிக்கொள்வதாய்த் தீர்மானம்.

4. இந்நாட்டில் மேற்கண்ட காரணங்களினால் விதவைகளின் தொகை அதிகரிப்பதும், அவர்களில் பலர் இளம் கைம்பெண்களாயிருப்பதும் விசனகரமான விஷயம். இவர்களை முண்டனஞ்செய்து அழகைக்குலைக்கும் கொடிய வழக்கத்தைத்தவிர்த்து விவாகஞ்செய்துகொள்ள விரும்புவோரைத்தடைசெய்யாது கூடுமானமட்டும் உதவிசெய்வதும், அவர்கட்காய் ஆதரணைச்சாலைகள் ஏற்படுத்தி நடத்துவதும் செய்யவேண்டிய காரியமாம்.

5. தற்காலம் அதிபாலியத்தில் பிள்ளைகளையும் பெண்களையும் கலியாணஞ்செய்து தரும் பழக்கம் பலவிடங்களில் படிப்படியாய்க் குறைந்துவருவதைக் கண்டு கான்பிரென்சு சபையார் களிப்புடன் ஆசாரச்சீர்திருத்தச் சபையில் ஆர்வங்கொண்ட அனைவரும் சமயம்வாய்க்கையில்பெண்களுக்குக்கொஞ்சம்வயது ஏறியபின் கலியாணஞ்செய்து தரும்படி தம் உற்றார் உறவினர் இவர்களிடத்துப் புத்திமதி சொல்வதும் அவசியம்.

6. தற்காலம் இந்துக்களில் பலர் கல்வி வியாபாரம் முதலிய காரணத்தால் கடல் யாத்திரைசெய்து புறநாட்டிற்குச்சென்று திரும்பிவர ஆரம்பித்தது சந்தோஷத்தை விளைக்கின்றது. அவ்வாறு சென்று திரும்புவோரை விலக்கிக்கொடுமைக்குள்ளாக்கும் வழக்கத்தைக் குறைக்கவும், இக்காரியத்தில் உற்சாகத்துடன் உழைக்கவும் வகை தேடுவதவசியம்.

7. கீழ்ச்சாதியரை அறியாமையினின்றும்விலகக் கைதூக்கிக்கொடுத்து, அவர்கள் நிலைமை சீர்ப்பட உதவிபுரிந்து வராமல் இருப்பதால் நாட்டிற்குண்டாகும் நஷ்டத்தை உணர்ந்து, அக்குறைவை நீக்க அனைவரும் முயலுதல் அவசியம்.

8. கலியாண காலங்களில் வீண் டம்பச்செலவுகளிலும், வதுவர காணிக்கைகளிலும், விருந்தூர்கோலங்களிலும் அதிக பணஞ் செலவிட்டுக்கஷ்டத்திற்கும் கடனுக்கு முள்ளாகும் பழக்கத்தைத் தவிர்க்க சன ஆசாரச்சீர்திருத்த சபையோர் செய்துவரும் முயற்சிகளைப் பலரும் ஆமோதித் துதவ வேண்டுமென்பதாம்.

9. இந்நாட்டுப் பாடசாலைகளில் சிலவற்றில் மதவிஷய போதனையும் ஏற்படுத்தி ஆரம்பித்தது நல்விஷயம் என்றும், அதைப்பரவச்செய்ய வேண்டுமென்றும் தீர்மானம்.

10. பெண்களை கோஷாவில் வைக்கும் வழக்கம் ஸ்திரீகளின் அங்கம் அறிவு ஆகிய இரண்டிற்கும் கெடுதி விளைப்பதாய் இருப்பதால், அவ்வழக்கம் நடமாடு மிடங்களிலும் சனங்களிலும் அதைக் குறைக்கும்படி சனங்கட்குப் போதித்தலவசியம்.

11. காட்டில் மதுபான விலக்கு விஷயமாயும் நேர்மையான நடத்தை விஷயமாயும் ஒவ்வொருவரும் முயலுவதவசியமென்று முன் கான்பிரன்சுகளில் ஏற்பட்ட தீர்மானத்தை இப்போதும் அங்கிகரித்தார்கள்.

12. இந்தியாவின் சில பாகங்களில் இறந்தவர்க்காய்த் துக்கங்கொண்டாடும் காலங்களில் ஸ்திரீகள் பகிரங்கமாய் மார்பிலடித்துக்கொள்ளுந் தூர்ப்பழக்கத்தை ஒழிக்கப் பார்க்கவேண்டும்.

13. மற்றைய மதங்களிற் சென்று, பின் இந்துமதத்திற் பிரவேசிக்க விரும்புவோரை ஜாதிப் பிரஷ்டராய்த் தள்ளிவிடாமல் ஏற்றுக்கொள்வதவசியம்.

14. அடுத்தவருஷம் கூடவிருக்கும் கான்பிரன்சு விஷயத்தில் ஜட்ஜி சந்திரவர்க்கர் அவர்களை ஜெனரல் காரியதரிசியாகவும், N. பஜேகர் அவர்களை உதவிக் காரியதரிசியாகவும் நியமித்து, அவர்கள் மாகாணக் காரியதரிசிகளை நியமிக்க அதிகாரந் தரப்பட்டது.

15. இராஜாங்கத்தார் படிக்க வயதுவராத இளம் பெண்களைக் காப்பாற்ற வகை தேடுவதை வந்தனத்துடன் அங்கீகரித்து, சீர்திருத்த சங்கத்தாரும் அதற்குதவியாய் நின்றுழைத்தலவசியம் என்றும் தீர்மானம்.

பெண்கல்வி விஷயமாய்ப்பேசுகையில் Mrs. கமலாகர் இங்கிலீஷிலும், Mrs. சீதம்மாள் தெலுங்கிலும் Mrs. விஸ்வநாத அய்யர் தமிழிலும் பேசினார்கள். அசலாம்பிகை அம்மாள் தமிழில் பேசத்தொடங்கி எல்லாருங்கைகொட்டிச் சந்தோஷத்துடன் ஆரவாரிக்க எழுந்துநின்று, முன் பிரயத்தன மேதுமின்றி மிகச் சாதுரியமாய்ப் பேசினார்கள்.

---

The MADRAS MAIL of 20th Oct. says:—

THE "VIVEKA CHINTAMANI."

"This high-class Tamil periodical entered upon the twelfth year of its existence a few months ago, and it has done much good work during this period to deserve the support of the Indian community. Mr. C. V. Swaminatha Iyer, its editor, has through his unaided exertions, brought the magazine to a high degree of literary merit. During the last year he has made religious philosophy a special feature of the journal and has contributed to its pages devotional writings particularly interesting to Hindu ladies. He is about to issue a collection of philosophic poems in easy Tamil, popularising the teachings of the Advaita school."

The *Hindu* (Nov. 5.) remarks: "The Journal aims at supplying the crying need in the present one sided secular education by emphasizing the spiritual side of man's growth and stimulating enquiry and thought in that line on principles which are of universal application."

THE "VIVEKACHINTAMANI."

We have received the Arudradarisanam special number of this useful magazine for January 1904. It opens with a message of love from the Far West from Dr. Cuthbert Hall, whose visit in India last winter, he says, "filled my heart with affectionate regard for Indians, I long to revisit your country and come into closer fellowship with your people." A new year's greeting from Dr. G. U. Pope gives a description of the characteristics of "the sages" from an ancient Tamil classic. "The Arudradarisanam 1904," "Sir Oliver Lodge on the position of science to-day" and a brief sketch entitled "Saved by Faith—A Godly woman's story of her salvation" are other articles of interest. The rest of the number to the extent of nearly 30 pages is taken with the text of "The Word of the Lord—Being an epitome of the Bhagavatgita: A Godly waman's gift to the faithful and true of her sex and her children." This version of the 'song celestial' is in simple and popular language adopted to the intelligence of women and children. We learn that it is already being used for recitation at home by Brahmin ladies of the South, both young and old during prayer hours. The author known as Avudayarammal was a saintly lady who attained self-realisation by her immense Bhakti. Her name appears in the "Philosophical Songs of the Indian Beggar" a lecture delivered by the late Mr. Ratnaswami Aiyar under the auspices of the Public Lecture Committee, Trivandram, which was published and dedicated "by kind permission" to His Excellency Sir Arthur Havelock. The key-note of all her philosophic and religious songs as well as those of others who have attained 'self-realisation' by their faith is "Universal sympathy." We feel sure that this great work of hers now first published will meet with universal appreciation from the Hindus, who have in it a popular version of their great religious book for the early grounding of women and children in their Faith.

The HINDU.

விவேகசிந்தாமணி சந்தாவிவரம்'.

**தளமான காகிதப்பதிப்பு:—** அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 8 அணா.

**லேசான காகிதப்பதிப்பு:**—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றப்படி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும் போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கு மிடமிராது.

# AFTER TWELVE YEARS.

The Diffusion of Knowledge Agency (established March 1892), now completes with its twelfth year, the first cycle of existence in its evolutionary growth. Beginning modestly with the object of creating a taste for general reading and a popular literature to meet the general want (then much felt), it has steadily worked on, step by step, pioneering the way to a number of workers in the field of popular Journalism, Vernacular literature, and rural sanitation, which last led it on to the present absorbing question of Religious Education and Educational Reform generally. The Government Resolution recently issued insist on a thorough grounding in the vernacular before the boy is seriously introduced to English studies. The Viceroy also insists on the need "to light up the lamp of the soul," "while we trim the wick of the intellect with mechanical accuracy." The following letter to the *Mail* will show how we are working for the same end and how it was that we took up "this question of Religion and Education with the conviction and the fervour" now 'manifest' to all observers, as Dr. Duncan writes to us. While thanking the Educational authorities and the public for their sympathy and their support in the past, we need them both in even greater measure in the arduous labour now before us, which with God's grace we hope to continue as long as health and strength are vouchsafed to us.

## THE CRUX OF THE SANITARY PROBLEM.

*(From the Madras Mail of 20th January 1904.)*

SIR,—The sanitary problem is becoming more and more pressing. Plague and pestilence has pushed it well to the front. At Bombay it demands immediate solution. Dr. J. A. Turner, the energetic Health Officer, finds himself taxed to the utmost of his resources. He has appealed to the citizens of the Empire City and they have come forward in response to his call. The result is the ushering into existence of the Bombay Sanitary Association. But how far it proves effective in coping with the great and puzzling problem of sanitation remains to be seen. The crux of the problem lies far deeper than most people imagine. At the inaugural Meeting held last Tuesday the Hon'ble the Chief Justice of Bombay put his finger on the spot when he laid emphasis on the need of creating a "hygienic conscience" in the people in order to cope successfully with the growing insanitary conditions and the dire evils like plague, etc., that result therefrom. The efforts of the Health Department under the able and energetic direction of Dr. Turner, the *Times of India* reports, "are stultified in every direction through lack of the co-operation of the people." Whether it be in the field of politics or Social Reform, in sanitation or rural credit, the cry everywhere is "the lack of co-operation of the people." That is the great stumbling block which the ardent reformer or the patient administrator meets with at every turn. The people themselves cannot be blamed. For, as you educate them so they are. It is the system of education that is at fault; and unless the Government tackle with the problem of Primary Education in right earnest and solve it in a way that will suit the national genius of the people and the traditions and sentiments engendered in their hearts from ages past, all spasmodic efforts at stirring up the conscience of people to healthy activity must prove futile or at best serve only as temporary makeshifts. "Hygienic conscience" if I understand His Lordship aright, is only another name for "healthy-mindedness." When the conscience is awake and active, its tendency is towards natural growth. As the tendency of plant life is ever to grow upwards towards the light of heaven that stimulates the life within it, so all conscious efforts tend to uplift the soul and raise humanity to a higher stage of development. For "Consciousness is Life." It is the light that lighteth every heart and its endeavours are always to lead the soul up, through the stress and strain of life, towards the *light* of heaven, which is the growth of soul or its development towards perfection. This awakening reveals itself in conduct as *character*.

All education therefore must be directed towards what the Americans call "character

building." It is the watch-word of the "new education" movement that is now making its influence felt in the United States. What to our brethren of the antipodes is "new" is "old" to us of this ancient *Bharata* land. So long as the principles that guide us are the same, it matters very little whether we brand them as "new" or "old."

I cull a few suggestive sentences from "a syllabus of ethical trainning in New York City School" which will illustrate what I have in mind when I urge the necessity of fundamental reform in the system of Primary Education in this country. "It should be the aim of every teacher to make each part of the life of the school count for moral education." "The personality of the teacher is at the root of all moral education in school." "Reverence is vital to morality." "Self-respect is also fundamental to moral development," and it must be engendered in the child by his being stimulated to honestly cope with the tasks within his reach. "The corner-stone of a self-respecting character is *Principle*—the will to be true to the right, because it is right, whatever the consequence," and to act "with firmness in the right as God gives us to see the right." Ability to discern the principle is the result of thinking and acting for oneself and reflecting on the experience so gained. "The essential difference between principle and mere self-interest must be brought home to each child." These in brief, are the fundamental principles on which the primary training of all children should be based, if we are to aim at "man-making" education and discourage "cramming" and "stuffing" the plastic mind with materials and information quite foreign and unsuited to its nature, which often destroys its power of assimilation and produces a "stunted growth," if not complete "atrophy." "No person has a fully developed moral character unless there has been a transfer of the seat of authority from without to within himself. A moral man obeys himself. Each child in every grade should be steadily helped towards self-direction and self-government."

The new-thought movement in America from which evidently has sprung up this "New education" movement with its devotion to the Kindergarten principles of Frœbel and their practical application to child-life, leading to child-study". "Nature-study" and "mind-study," lays great emphasis on the power of ideals to change and mould man's life. "The value, the potency of ideals is the great practical truth on which the new thought most strongly insists—the develoment namely, from within outward, from small to great," says Mr. Horatio W. Dresser, an able exponent of this new school. A psychological examination of this principle leads one to the conclusion that genuine "religious sentiment" is the basis of all these high-sounding principles and practices as well. "Faith" is the simple name for what the psychologist describes in long-sounding sonorous words and phrases. Dr. Goddard, after a candid psychological examination of "faith-cures" conclusively says:—"Living up to (our religious) ideas will do anything for us that can be done." This secret of the "Mental Scientists" and "Faith-curers" of the West, the ancients in India perfectly understood and deftly applied their knowledge in practice. This I learned after two years of unremitting devotion to sanitary work by a study of the people's notions and perjudices and the way to reach their hearts, which necessitated my studying the inner-meaning of the religious traditions and sentiments in which they were steeped from top to toe. One such study entitled "An Ancient Hindu Sanatorium," I contributed to your columns, which was published in the *Madras Mail* of the 22nd March 1900. As a result, I am devoting myself, in my own humble way, to this awakening of conscience among the Tamils, for whom I have laboured all my life, and I take it as a hopeful sign of the times that the principle is fast finding recognition everywhere. My own first inspiration in this matter I owe to my conversation with a Civilian officer who helped me with his counsel and sympathy as a member of "the Committee for the Diffusion of Sanitary Knowledge" which I then formed. This is merely another phase of the great problem of "religious education"—a problem that has been too long neglected with consequences disastrous to the people at large—the evil effect of which on the general administration of the country is bound to be felt more and more as the character of the people deteriorates under the disintegrating influences of a purely intellectual education, as the present system at its best is.

C. V. SWAMINATHA IYAR.

TRIPLICANE, 17*th Jany.*